# பத்தாம் வகுப்பு புதிய தமிழ் புத்தகம்

# 631 வினா விடை

|  Join us on Telegram or search "minnalvegakanitham" in Telegram | https://t.me/joinchat/OgtzmQxvzOtvPwMhKaEcOg<br>(அல்லது)<br>https://t.me/minnalvegakanitham |
|---|---|

**டிஎன்பிஎஸ்சி குரூப் 4, வீஏஓ பொருத்தவரை பத்தாம் வகுப்பு தமிழ் புத்தகத்தில் இருந்து 25 வினாக்கள் கேட்கப்படுகின்றன எனவே இதனை கருத்தில் கொண்டு இந்த 631 வினா விடை உருவாக்கப்பட்டுள்ளது இது உங்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும்**

## இயல் ஒன்று

*மொழி*

## அமுதஊற்று

1. **அன்னை மொழியே எனும் கவிதையை எழுதியவர் யார்** ?

Answer: **பாவலரேறு பெருஞ்சித்திரனார்**

2. "**அன்னை மொழியே**! **அழகார்ந்த செந்தமிழே**"**எனும் வரிகளை இயற்றியவர் யார்**

Answer: **பாவலரேறு பெருஞ்சித்திரனார்**

3. "தென்னன் மகளே! திருக்குறளின் மாண்புகழே!"-இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது?

Answer: **கனிச்சாறு**

4. "உள்ளுயிரே செப்பரிய நின்பெருமை எந்தமிழ்நா எவ்வாறு எடுத்தே உரைவிரிக்கும்?"-இவ்வரிகளை எழுதியவர் யார்

Answer: **பாவலரேறு பெருஞ்சித்திரனார்**

5. "சாகும்போதும் தமிழ்படித்துச் சாகவேண்டும்- என்றன் சாம்பலும் தமிழ்மணந்து வேகவேண்டும்"- இவ்வரிகளை கூறியவர் யார்?

Answer: **சச்சிதானந்தன்**

6. பாவலரேறு பெருஞ்சித்திரனார் எந்தக் இதழ்களின் வாயிலாக தமிழ் உணர்வை உலகெங்கும் பரப்பினார்?

Answer: **தென்மொழி ,தமிழ்ச்சிட்டு**

7. பெருஞ்சித்திரனாரின் இயற்பெயர் என்ன

Answer: **துரை.மாணிக்கம்**

8. பெருஞ்சித்திரனார் எழுதிய நூல்கள் என்னென்ன?

Answer: **உலகியல் நூறு, பாவியக்கொத்து, நூறாசிரியம், கனிச்சாறு,எண்சுவை எண்பது ,மகபுகுவஞ்சி, பள்ளிப் பறவைகள், திருக்குறள் மெய்ப்பொருளுரை**

9. தமிழ் சொல் வளம் எனும் உரைநடையை எழுதியவர் யார்?

Answer: **தேவநேயப்பாவணர்**

10. "நாடும் மொழியும் நமது இரு கண்கள்" எனக் கூறியவர் யார்

Answer: **மகாகவி பாரதியார்**

11. "**தமிழில் மட்டும் பயன்படுத்தப்பட்டு தமிழுக்கே சிறப்பாக உரியனவாக கருதப்படும் சொற்கள் மட்டுமன்றி தெலுங்கு, கன்னடம் முதலிய பிற திராவிட மொழிகளுக்குரியனவாகக் கருதப்படும் சொற்களும் தமிழில் உள" எனக் கூறியவர் யார்**?

Answer: **கால்டுவெல்**

12. **திராவிட மொழிகளின் ஒப்பியல் இலக்கணம் என்ற நூலை எழுதியவர் யார்**

Answer: **கால்டுவெல்**

13. **நெல், கேழ்வரகு முதலியவற்றின் அடி எவ்வாறு குறிக்கப்படும்**

Answer: **தாள்**

14. **கீரை, வாழை முதலியவற்றின் அடி எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **தண்டு**

15. **நெட்டி, மிளகாய்ச் செடி முதலியவற்றின் அடி அவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கோல்**

16. **குத்துச்செடி, புதர் முதலியவற்றின் அடி எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **தூறு**

17. **கம்பு, சோளம் முதலியவற்றின் அடி எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **தட்டு அல்லது தட்டை**

18. **கரும்பின் அடியை குறிக்கப் பயன்படும் சொல் எது**

Answer: **கழி**

19. **மூங்கிலின் அடி எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கழை**

20. **புளி மற்றும் வேம்பு முதலியவற்றின் அடி எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **அடி**

21. **அடிமரத்தினின்று பிரியும் மாபெரும் கிளை பிரிவிற்கு பெயர் என்ன**?

Answer: **கவை**

22. **கவையின் பிரிவு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கொம்பு அல்லது கொப்பு**

23. **கொம்பின் பிரிவு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கிளை**

24. **கிளையின் பிரிவு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **சினை**

25. **சினையின் பிரிவு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **போத்து**

26. **போத்தின் பிரிவு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **குச்சு**

27. **குச்சியின் பிரிவு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **இணுக்கு**

28. **காய்ந்த குச்சி எவ்வாறு அழைக்கப்படுகிறது**

Answer: **சுள்ளி**

29. **காய்ந்த சிறுகிளையின் பெயர் என்ன**

Answer: **விறகு**

30. **காய்ந்த கழியின் பெயர் என்ன**

Answer: **வெங்கழி**

31. **காய்ந்த கொம்பும் கவையும் அடியும் எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கட்டை**

32. **புளி வேம்பு முதலியவற்றின் இலையின் பெயர் என்ன**

Answer: **இலை**

33. **நெல், புல் முதலியவற்றின் இலை எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **தாள்**

34. **சோளம், கரும்பு முதலியவற்றைறின் இலை எவ்வாறு அழைக்கப்படுகிறது**

Answer: **தோகை**

35. **தென்னை மற்றும் பனை முதலியவற்றின் இலை எவ்வாறு அழைக்கப்படுகிறது**

Answer: **ஓலை**

36. **காய்ந்த தாளும் தோகையும் எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **சண்டு**

37. **காய்ந்த இலையின் வேறு பெயர் என்ன**

Answer: **சருகு**

38. **நெல், புல் முதலியவற்றின் கொழுந்து எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **துளிர் அல்லது தளிர்**

39. **புளி,வேம்பு முதலியவற்றின் கொழுந்து எவ்வாறு அழைக்கப்படும்**?

Answer: **முறி அல்லது கொழுந்து**

40. **சோளம் கரும்பு தென்னை பனை முதலியவற்றின் கொழுந்து எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **குருத்து**

41. **கரும்பின் நுனிப்பகுதி எவ்வாறு அழைக்கப்படும்**?

Answer: **கொழுந்தாடை**

42. **பூவின் தோற்றநிலை எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **அரும்பு**

43. **பூ விரியத் தொடங்கும் நிலைக்கு என்ன பெயர்**

Answer: **போது**

44. **பூவின் மலர்ந்த நிலை பெயர் என்ன**

Answer: **மலர் அல்லது அலர்**

45. **மரஞ்செடியினின்று பூ கீழே விழுந்த நிலை எவ்வாறு குறிக்கப்படும்**

Answer: **வீ**

46. **பூ வாடிய நிலைக்கு பெயரென்ன**

Answer: **செம்மல்**

47. **சொல் ஆராய்ச்சியில் பாவாணரும் வியந்த பெருமகனார் யார்**?

Answer: **தமிழ்த்திரு**. **இரா**.**இளங்குமரனார்**

48. **தமிழ் தென்றல் என அழைக்கப்பட்டவர் யார்**

Answer: **திரு வி க**

49. **இமைகளை மூடியபடி தமிழில் எழுதும் ஆற்றல் கொண்டவர் யார்**

Answer: **திரு.வி.க**

50. **விழிகளை இழக்க நேரிட்டால் கூட தாய்த்தமிழ் இழந்துவிடக் கூடாது என திரு வி.க போல் எழுதும் ஆற்றலை கற்றுக் கொண்டவர் யார்**

Answer: **தமிழ்த்திரு**. **இரா**.**இளங்குமரனார்**

51. **தமிழ்த்திரு**. **இரா**.**இளங்குமரனார் இயற்றிய நூல்கள் என்னென்ன**?

Answer: **இலக்கண வரலாறு, தமிழிசை இயக்கம் ,தனித்தமிழ் இயக்கம் ,பாவாணர் வரலாறு, குண்டலகேசி உரை, யாப்பருங்கலம் உரை, புறத்திரட்டு உரை, திருக்குறள் தமிழ் மரபுரை,காக்கைபாடினிய உரை,தேவநேயம்**

52. **பூவோடு கூடிய இளம்பிஞ்சு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **பூம்பிஞ்சு**

53. **இளம் காயின் வேறு பெயர் என்ன**

Answer: **பிஞ்சு**

54. **மாம்பிஞ்சு வேறு பெயர் என்ன**

Answer: **வடு**

55. **பலாப்பிஞ்சு வேறு பெயர் என்ன**

Answer: **மூசு**

56. **எள்பிஞ்சிற்கு வழங்கும் சொல் என்ன**

Answer: **கவ்வை**

57. **தென்னை பனை முதலியவற்றின் இளம் பிஞ்சு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **குரும்பை**

58. **சிறு குரும்பையின் வேறு பெயர் என்ன**

Answer: **முட்டு குரும்பை**

59. **முற்றாத தேங்காய் எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **இளநீர்**

60. **இளம்பாக்கு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **நுழாய்**

61. **இளநெல் எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கருக்கல்**

62. **வாழைப்பிஞ்சு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கச்சல்**

63. **அவரை,துவரை முதலியவற்றின் குலையின் பெயர் என்ன**

Answer: **கொத்து**

64. **கொடிமுந்திரி போன்றவற்றின் குலையின் பெயர் என்ன**

Answer: **குலை**

65. **வாழைக் குலையின் பெயர் என்ன**

Answer: **தாறு**

66. **கேழ்வரகு,சோளம் இவற்றின் கதிர் எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கதிர்**

67. **நெல்**, **தினை முதலியவற்றின் கதிர் எவ்வாறு அழைக்கப்படும்**?

Answer: **அலகு அல்லது குரல்**

68. **வாழைத் தாற்றின் பகுதி எவ்வாறு அழைக்கப்படும்**?

Answer: **சீப்பு**

69. **நுனியில் சுருங்கிய காய் எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **சூம்பல்**

70. **சுருங்கிய பழத்தின் பெயர் என்ன**

Answer: **சிவியல்**

71. **புழு ,பூச்சி அரித்த காய் அல்லது கனி எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **சொத்தை**

72. **சூட்டினால் பழுத்த பிஞ்சு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **வெம்பல்**

73. **குளுகுளுத்த பழம் எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **அளியல்**

74. **குளுகுளுத்து நாறிய பழம் அல்லது காய் எவ்வாறு அழைக்கப்படும்**?

Answer: **அழுகல்**

75. **பதராய்ப் போன மிளகாய் எவ்வாறு அழைக்கப்படும்**?

Answer: **சொண்டு**

76. **கோட்டான் உட்கார்ந்ததனால் கெட்ட காய் எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கோட்டான் காய் அல்லது கூகைக்காய்**

77. **தேரை அமர்ந்ததினால் கெட்ட காய் இதன் பெயர் என்ன**?

Answer: **தேரைக்காய்**

78. **தேரை அமர்ந்ததினால் கெட்ட தேங்காய் இதன் பெயர் என்ன**?

Answer: **அல்லிக்காய்**

79. **தென்னையில் கெட்ட காய் அவ்வாறு அழைக்கப்படும்**?

Answer: **ஒல்லிக்காய்**

80. **மிக மெல்லிய பழத்தின் மேற்பகுதியை குறிக்கப் பயன்படும் சொல் எது**

Answer: **தொலி**

81. **திண்ணமான பழத்தின் மேற்பகுதியை குறிக்க பயன்படும் சொல்**

Answer: **தோல்**

82. **வன்மையான பழத்தின் மேற்பகுதியை குறிக்கப் பயன்படும் சொல்**

Answer: **தோடு**

83. **மிக வன்மையான பழத்தின் மேல் பகுதியை குறிக்க பயன்படும் சொல்**

Answer: **ஓடு**

84. **சுரையின் ஓடு எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **குடுக்கை**

85. **தேங்காய் நெற்றின் மேற்பகுதி எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **மட்டை**

86. **நெல் ,கம்பு முதலியவற்றின் மூடியவாறு அழைக்கப்படும்**

Answer: **உமி**

87. **வரகு ,கேழ்வரகு முதலியவற்றின் ஒலி எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கொம்மை**

88. **நெல் புல் கம்பு முதலிய தானியங்கள் எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கூலம்**

89. **அவரை உளுந்து முதலிய தானியங்கள் குறிக்கப் பயன்படும் சொல்**

Answer: **பயறு**

90. **வேர்க்கடலை கொண்டக்கடலை முதலிய தானியங்கள் குறிக்க பயன்படும்**

Answer: **கடலை**

91. **கத்தரி மிளகாய் முதலியவற்றின் வித்து எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **விதை**

92. **புளி,காஞ்சிரை முதலியவற்றின் வித்து எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **காழ்**

93. **வேம்பு, ஆமணக்கு முதலியவற்றின் வித்து எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **முத்து**

94. **மா,பனை முதலியவற்றின் வித்து எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கோட்டை**

95. **தென்னையின் வித்து எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **தேங்காய்**

96. **அவரை துவரை முதலிய பயிர்கள் எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **முதிரை**

97. **நெல் கத்தரி முதலியவற்றின் இளநிலை எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **நாற்று**

98. **மா புளி வாழை முதலியவற்றின் இளநிலை எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **கன்று**

99. **வாழையின் இளநிலை எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **குருத்து**

100. **தென்னையின் இளநிலை எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **பிள்ளை**

101. **விளாவின் இளநிலை எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **குட்டி**

102. **பனையின் இளநிலை எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **மடலி அல்லது வடலி**

103. **நெல் ,சோளம் முதலியவற்றின் பசும் பயிர் எவ்வாறு அழைக்கப்படும்**

Answer: **பைங்கூழ்**

104. **உலகத்திலேயே ஒரு மொழிக்காக உலக மாநாடு நடத்திய முதல் நாடு எது**

Answer: **மலேசியா**

105. **உலகத்திலேயே முதல் முறையாக மொழிக்கு உலக மாநாடு நடத்தப்பட்டது எந்த மொழி**

Answer: **தமிழ்**

106. **க. அப்பாதுரையாரின் சிறப்பு பெயர் என்ன**

Answer: **பன்மொழிப்புலவர்**

107. **தமிழ்நாட்டில் மட்டும் விளையும் சிறுகூலங்கள் என்னென்ன**?

Answer: **வரகு**, **காடைக்கண்ணி**, **குதிரைவாலி**

108. **மொழி ஞாயிறு என அழைக்கப்படுபவர் யார்**

Answer: **தேவநேயபாவாணர்**

109. **தமிழ் சொல் வளம் எனும் கட்டுரை எந்த நூலில் உள்ளது**

Answer: **சொல்லாய்வு கட்டுரைகள்**

110. **சொல்லாய்வு கட்டுரைகள் என்னும் நூலை எழுதியவர் யார்**

Answer: **தேவநேயப்பாவணர்**

111. **செந்தமிழ் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்குனராக பணியாற்றியவர் யார்**

Answer: **தேவநேய பாவணர்**

112. **போர்ச்சுகீசிய நாட்டின் தலைநகர் எது**

Answer: **லிசுபன்**

113. **கார்டிலா எனும் நூல் முதன்முதலாக தமிழ் மொழியில் எந்த ஆண்டு மொழி பெயர்க்கப்பட்டது**

Answer: 1554

114. **இந்திய மொழிகளிலேயே மேலைநாட்டு எழுத்துருவில் முதலில் அச்சேறிய மொழி எது**

Answer: **தமிழ்**

115. "**முத்தமிழ் துய்ப்பதால் முச்சங்கம் கண்டதால்..**"**என ஆழிக்கு இணையாக தமிழ் கூறப்பட்டுள்ளது எந்த நூல்**

Answer: **தனிப்பாடல் திரட்டு**

116. **மூன்று வகையான சங்குகள் என்னென்ன**?

Answer: **வெண்சங்கு**, **சலஞ்சலம்**, **பாஞ்சசன்யம்**

117. **ஒரு சொல்லோ**, **சொற்றொடரோ இரு பொருள்பட வருவதற்கு என்ன பெயர்**?

Answer: **இரட்டுறமொழிதல் அணி**

118. **இரட்டுறமொழிதல் அணியின் வேறு பெயர் என்ன**?

Answer: **சிலேடையணி**

119. **சந்தக்கவிமணி என குறிப்பிடப்படுபவர் யார்**

Answer: **தமிழழகனார்**

120. **தமிழழகனாரின் இயற்பெயர் என்ன**

Answer: **சண்முகசுந்தரம்**

121. **முதல் தமிழ் கணினி எந்த ஆண்டு உருவாக்கப்பட்டது**

Answer: 1983 **செப்டம்பர்**

122. **முதல் தமிழ் கணினியை உருவாக்கிய நிறுவனம் எது**?

Answer: **டிசிஎம் டேட்டா புரொடக்ட்ஸ்**

123. **முதல் தமிழ்வழிக் கணினியின் பெயர் என்ன**

Answer: **திருவள்ளுவர்**

124. **குறிஞ்சி மலர் என்னும் நூலை எழுதியவர் யார்**

Answer: **நா.பார்த்தசாரதி**

125. "**உவமையும் பொருளும் வேற்றுமை ஒழிவித்து ஒன்றென மாட்டின் அஃது உருவகமாகும்" என உருவகத்தை பற்றி கூறியவர் யார்**?

Answer: **தண்டி**

126. "**களம்புக துடித்து நின்ற உனக்கு வெற்றி சாறு கிடைத்துவிட்டது**. **உண்டு மகிழ்ந்தாய்**; **உன் புன்னகை தான் அதற்கு சான்று" இவ்வரிகளை எழுதியவர் யார்**?

Answer: **அறிஞர் அண்ணா**

127. **எடுத்துக்காட்டு உவமை அணியை உரைநடையில் பயன்படுத்துகையில் அதற்கு என்ன பெயர்**

Answer: **இணை ஒப்பு**

128. **மழையும் புயலும் எனும் நூலை எழுதியவர் யார்**?

Answer: **வ**. **ராமசாமி**

129. **உயிர் இல்லாத பொருள்களை உயிருள்ளன போலவும்**, **உணர்வு இல்லாத பொருள்களை உணர்வுடையன போலவும் கற்பனை செய்வதற்கு என்ன பெயர்**?

Answer: **இலக்கணை**

130. **தமிழ் இன்பம் எனும் நூலை எழுதியவர் யார்**

Answer: **இரா.பி.சேதுபிள்ளை**

131. **இரா.பி.சேதுப்பிள்ளைக்கு வழங்கும் சிறப்பு பெயர் என்ன**

Answer: **சொல்லின் செல்வர்**

132. **நாட்டுப்பற்று எனும் கட்டுரை எழுதியவர் யார்**?

Answer: **மு.வரதராசனார்**

133. **சொல்லும் முறையில் அழுத்தம் கொடுப்பதற்காக எதிரும் புதிருமான முரண்படும் கருத்துக்களை அமைத்து எழுதுவதற்கு பெயரென்ன**?

Answer: **எதிரிணை இசைவு**

134. "**பெரியாருடைய பெரும் பணியை நான் ஒரு தனி மனிதனின் வரலாறு என்றல்ல -ஒரு சகாப்தம்- ஒரு கால கட்டம் -ஒரு திருப்பம் என்று கூறுகிறேன்**" **எனக் கூறியவர் யார்**?

Answer: **அறிஞர் அண்ணா**

135. "**இந்தியாதான் என்னுடைய மோட்சம்**" **எனக் கூறியவர் யார்**?

Answer: **மகாகவி பாரதியார்**

136. **உரைநடையின் அணிநலன்கள் என்னும் கட்டுரை எந்த நூலில் உள்ளது** ?

Answer: **புதிய உரைநடை**

137. **புதிய உரைநடை எனும் நூலை எழுதியவர் யார்**

Answer: **எழில்முதல்வன்**

138. **எழில்முதல்வன் இயற்பெயர் என்ன**

Answer: **மா.ராமலிங்கம்**

139. **எழில்முதல்வன் எங்கு தமிழ்த்துறை தலைவராக பணியாற்றினார்** ?

Answer: **குடந்தை அரசு ஆடவர் கல்லூரி ,பாரதிதாசன் பல்கலைகழகம்**

140. **எழில்முதல்வன் எழுதிய நூல்கள் என்னென்ன**?

Answer: **இனிக்கும் நினைவுகள்**, **எங்கெங்கு காணினும்**, **யாதுமாகி நின்றாய்**

141. **எழில்முதல்வன் எந்த நூலுக்காக சாகித்ய அகடமி விருது பெற்றார்**

Answer: **புதிய உரைநடை**

142. "**வாழையும் கமுகும் தாழ்குலைத் தெங்கும் மாவும் பலாவும் சூழ்அடுத்து ஓங்கி தென்னவன் சிறுமலை திகழ்ந்து தோன்றும்"இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**

Answer: **சிலப்பதிகாரம் காடுகாண் காதை**

143. "**வாழையும் கமுகும் தாழ்குலைத் தெங்கும் மாவும் பலாவும் சூழ்அடுத்து ஓங்கி தென்னவன் சிறுமலை திகழ்ந்து தோன்றும்"இவ்வரிகளில் குறிப்பிடப்படும் சிறுமலை எந்த மாவட்டத்தில் உள்ளது**

Answer: **திண்டுக்கல்**

144. "**மரமது மரத்தில் ஏறி மரமதை தோளில் வைத்து**.." **தனிப்பாடல் திரட்டு எழுதியவர் யார்** ?

Answer: **சுந்தர கவிராசர்**

145. **மரம் எனும் சொல்லிற்கு வழங்கப்படும் பொருள்கள் என்ன**?

Answer: **அரசமரம்**, **குதிரை** ,**வேல்** ,**அரசன்** , **புலி** , **கருவேலம்** , **காட்டுவழி**, **ஆலமரம்**, **அத்திமரம்** , **குதிரை** , **மாமரம்**

146. "**தேனிலே ஊறிய செந்தமிழின் சுவைதேறும் சிலப்பதிகாரம்**" **என கூறியவர் யார்**?

Answer: **கவிமணி தேசிய விநாயகம்**

147. "**தேனினும் இனிய நற் செந்தமிழ் மொழியே**" **இவ்வரிகளை எழுதியவர் யார்**

Answer: **கா**.**நமச்சிவாயர்**

148. **நாம் ஏன் தமிழ் காக்க வேண்டும் என் நூலின் ஆசிரியர் யார்**

Answer: **முனைவர் சேதுமணி மணியன்**

149. **தவறின்றித் தமிழ் எழுதுவோம் நூலின் ஆசிரியர் யார்**

Answer: **மா.நன்னன்**

150. **பச்சை நிழல் எனும் நூலின் ஆசிரியர் யார்**

Answer: **உதயசங்கர்**

151. **திருச்சிராப்பள்ளிக்கு அருகில் அல்லூரில் திருவள்ளுவர் தவச்சாலை அமைத்தவர் யார்**?

Answer: **தமிழ்த்திரு**. **இரா**.**இளங்குமரனார்**

## இயல் இரண்டு

*இயற்கை, சுற்றுச்சூழல்*

# உயிரின் ஓசை

1. **உலகம் என்பது ஐம்பெரும் பூதங்களால் ஆனது என கூறியவர்**?

Answer: **தொல்காப்பியம்**

2. **தம் எந்த நூலில் மூச்சுப் பயிற்சியே உடலைப் பாதுகாத்து வாழ்நாளை நீடிக்கும் என திருமூலர் கூறியுள்ளார்**?

Answer: **திருமந்திரம்**

3. "**வாயு வழக்கம் அறிந்து செறிந்தடங்கில் ஆயுள் பெருக்கம் உண்டாம்**" **இவ்வரிகள் இடம்பெற்ற நூல்**?

Answer: **ஔவைக் குறள்**

4. **அவ்வையார் எந்த அதிகாரத்தில் வாயு வழக்கம் அறிந்து செறிந்தடங்கில் ஆயுள் பெருக்கம் உண்டாம் எனக் கூறியுள்ளார்** ?

Answer: **வாயுதாரணை**

5. **கிழக்கு என்பதற்கு வழங்கப்படும் வேறு பெயர் என்ன**?

Answer: **குணக்கு**

6. **கிழக்கிலிருந்து வீசும் போது காற்று எவ்வாறு அழைக்கப்படுகிறது**?

Answer: **கொண்டல்**

7. **கடல் பகுதியிலிருந்து மேல் உள்ள மழை மேகங்களை சுமந்து வருவதால் மழை காற்று என அழைக்கப்படும் காற்று எந்த திசையில் இருந்து வீசும்**?

Answer: **கிழக்கு**

8. **மேற்கு என்பதற்கு வழங்கப்படும் வேறு பெயர் என்ன**?

Answer: **குடக்கு**

9. **மேற்கிலிருந்து வீசும் போது காற்று எவ்வாறு அழைக்கப்படுகிறது**?

Answer: **கோடை**

10. **எந்த திசையில் இருந்து வீசும் காற்று வெப்ப காற்றாகிறது**?

Answer: **மேற்கு**

11. **வடக்கு என்பதற்கு வழங்கப்படும் வேறு பெயர்**?

Answer: **வாடை**

12. **வடக்கில் இருந்து வீசும் காற்று எவ்வாறு அழைக்கப்படுகிறது**?

Answer: **வாடைக்காற்று**

13. **வாடைக்காற்றுக்கு வழங்கப்படும் வேறு பெயர் என்ன** ?

Answer: **குளிர்ச்சியான ஊதைக்காற்று**

14. **தெற்கிலிருந்து வீசும் காற்றுக்கு என்ன பெயர்**?

Answer: **தென்றல்**

15. "**வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்" இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **சிலப்பதிகாரம்**

16. "**நந்தமிழும் தண்பொருநை நன்னதியும் சேர்**…" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **பத்மகிரி நாதர் தென்றல் விடு தூது**

17. **பத்மகிரி நாதர் தென்றல் விடு தூது நூலை எழுதியவர் யார்**?

Answer: **பலபட்டடை சொக்கநாதப் புலவர்**

18. "**நளிஇரு முந்நீர் நாவாய் ஓட்டி வளிதொழில் ஆண்ட**" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **புறநானூறு**

19. **ஹிப்பாலஸ் எப்போது பருவக் காற்றின் உதவியினால் முசிறி துறைமுகத்திற்கு விரைவில் பயணம் செய்யும் புதிய வழியைக் கண்டுபிடித்தார்** ?

Answer: **கி.பி. முதல் நூற்றாண்டு**

20. "**நளிஇரு முந்நீர் நாவாய் ஓட்டி வளிதொழில் ஆண்ட**" **இவ்வரிகளை இயற்றியவர் யார்**?

Answer: **வெண்ணிக் குயத்தியார்**

21. "**நளிஇரு முந்நீர் நாவாய் ஓட்டி வளிதொழில் ஆண்ட**" **இவ்வரிகளில் யாரை பாடியுள்ளார்**

Answer: **கரிகால் பெருவளத்தான்**

22. **இந்தியாவிற்கு தேவையான** 70 **விழுக்காடு மழை அளவினை எந்த பருவக்காற்று தருகிறது**?

Answer: **தென்மேற்கு பருவக்காற்று**

23. "**வளி மிகின் வலி இல்லை**" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **புறநானூறு**

24. "வளி மிகின் வலி இல்லை" இவ்வரிகளை இயற்றியவர்?

Answer: ஐயூர் முடவனார்

25. கடுங்காற்று மணலைக் கொண்டு வந்து சேர்க்கிறது என புறநானூற்றுப் பாடலில் குறிப்பிடுவது யார்?

Answer: மதுரை இளநாகனார்

26. உலக காற்றாலை மின் உற்பத்தியில் இந்தியா எத்தனாவது இடம் பெற்றுள்ளது?

Answer: ஐந்தாமிடம்

27. காற்றாலை மின் உற்பத்தியில் இந்தியாவில் எந்த மாநிலம் முதலிடம் வகிக்கிறது?

Answer: தமிழகம்

28. உலகிலேயே அதிக அளவு காற்றை மாசுபடுத்தும் நாடுகளில் இந்தியாவுக்கு எத்தனையாவது இடம்?

Answer: இரண்டாவது இடம்

29. காற்று மாசுபடுவதால் குழந்தைகளின் மூளை வளர்ச்சி குறைவதாக எது தெரிவித்துள்ளது?

Answer: ஐக்கிய நாடுகளின் சிறுவர் நிதியம்

30. UNICEFன் விரிவாக்கம் என்ன?

Answer: United Nations Children's Fund

31. குளோரோ புளோரோ கார்பனின் ஒரு மூலக்கூறு எவ்வளவு ஓசோன் மூலக்கூறுகளை சிதைத்து விடுகிறது?

Answer: ஒரு லட்சம்

32. **உலக காற்று நாளாக கொண்டாடப்படுவது எப்போது**?

Answer: **ஜூன்** 15

33. **எந்த நாட்டு மன்னரின் முடிசூட்டு விழாவில் திருவெம்பாவை திருப்பாவை பாடல்கள் தாய்மொழியில் எழுதிவைத்து பாடுகின்றனர்**?

Answer: **தாய்லாந்து**

34. **ஒன்றே உலகம் எனும் நூலின் ஆசிரியர் யார்**?

Answer: **தனிநாயகம் அடிகள்**

35. "**மகரந்தத் தூளை சுமந்துகொண்டு,மனத்தை மயலுறுத்தகின்ற இனிய வாசனையுடன் வா**" **எனக் காற்றை அழைத்தவர் யார்** ?

Answer: **மகாகவி பாரதியார்**

36. **நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலா எனப் பாராட்டுப் பெற்றவர் யார்** ?

Answer: **மகாகவி பாரதியார்**

37. **சிந்துக்கு தந்தை எனப் பாராட்டப் பெற்றவர் யார்**?

Answer: **மகாகவி பாரதியார்**

38. **மகாகவி பாரதியார் எழுதிய நூல்கள் என்னென்ன**?

Answer: **குயில் பாட்டு**, **பாஞ்சாலி சபதம்** ,**கண்ணன் பாட்டு** , **பாப்பா பாட்டு** , **புதிய ஆத்திசூடி**

39. **பாரதியார் ஆசிரியராக பணியாற்றிய இதழ்கள் என்னென்ன**?

Answer: **இந்தியா**, **சுதேசமித்திரன்**

40. **பாட்டுக்கொரு புலவன் என பாராட்டப்பட்டவர் யார்**?

Answer: **பாரதியார்**

41. **வசனக்கவிதை தமிழில் யாரால் அறிமுகப்படுத்தப்பட்டது**?

Answer: **மகாகவி பாரதியார்**

42. "**பேய் கொண்டு தக்கை யடிக்குது காற்று- தக்கத் தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட**" **இவ்வரிகளை இயற்றியவர் யார்** ?

Answer: **பாரதியார்**

43. **முல்லைப்பாட்டு நூலை எழுதியவர் யார்**?

Answer: **நப்பூதனார்**

44. "**நனந்தலை உலகம் வளைஇ நேமியொடு வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை**" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **முல்லைப்பாட்டு**

45. "**சிறு தாம்பு தொடுத்த பசலைக் கன்றின் உறுதுயர் அலமரல் நோக்கி**" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **முல்லைப்பாட்டு**

46. **ஏதேனும் ஒரு செயல் நன்றாக முடியுமோ முடியாதோ என ஐயம் கொண்ட பெண்கள் தெய்வத்தைத் தொழுது நின்று அயலார் பேசும் சொல்லைக் கூர்ந்து கேட்பர்**; **அவர்கள் நல்ல  சொல்லைக் கூறின் தம் செயல் நன்மையில் முடியும் என்றும் தீய மொழியை கூறின் தீதாய் முடியும்** "**என்றும் கொள்வதற்கு என்ன பெயர்** ?

Answer: **விரிச்சி கேட்டல்**

47. **முல்லைப்பாட்டு எத்தனை அடிகளைக் கொண்டது** ?

Answer: 103 **அடிகள்**

48. **முல்லைப்பாட்டு என்ன பாவகையில் இயற்றப்பட்டுள்ளது** ?

Answer: **ஆசிரியப்பா**

49. பத்துப்பாட்டில் குறைந்த அடிகளை உடைய நூல் எது?

Answer: முல்லைப்பாட்டு

50. நப்பூதனார் யாருடைய மகன்? காவிரிப்பூம்பட்டினத்து

Answer: பொன்வணிகனார்

51. வட இந்திய பெருங்கடலில் உருவாகும் புயல்களுக்கு பெயர் வைக்கும் நடைமுறை எந்த ஆண்டில் தொடங்கியது?

Answer: 2000

52. புதுடெல்லியில் உள்ள உலக வானிலை அமைப்பின் மண்டல சிறப்பு வானிலை ஆய்வு மையம் எப்போதிலிருந்து புயல்களுக்கு பெயர் வைக்க 64 பெயர்களை பட்டியலிட்டுள்ளது?

Answer: 2004 செப்டம்பர்

53. புவி தனது அச்சில் எந்த திசையில் சுழல்கிறது?

Answer: மேற்கிலிருந்து கிழக்காக

54. புவி தனது சுழற்சியால் நிலநடுக்கோட்டின் வடக்குப் பகுதியில் வீசும் காற்றை என்ன திசையில் திருப்பும்?

Answer: வலப்புறம்

55. புவி தனது சுழற்சியால் நிலநடுக்கோட்டின் தெற்குப் பகுதியில் வீசும் காற்றை என்ன திசையில் திருப்பும்?

Answer: இடப்புறம்

56. வங்கக் கடலில் வீசும் புயல்கள் எவ்வாறு அழைக்கப்படும்?

Answer: இடம்புரி புயல்கள்

57. வேறு எந்தெந்த நாட்டில் இடம்புரி புயல்கள் உருவாகின்றன?

Answer: **அமெரிக்கா**, **ஜப்பான்**, **சீனா**

58. **ஆஸ்திரேலியாவின் கிழக்குக் கரை**, **ஹவாய் தீவை தாக்கிய புயல்கள் என்ன பெயர்கள்**?

Answer: **வலம்புரி பெயர்கள்**

59. **கொரியாலிஸ் விளைவு எந்த ஆண்டு கண்டுபிடிக்கப்பட்டது** ?

Answer: 1835

60. **கொரியாலிஸ் விளைவை கண்டுபிடித்தவர் யார்**?

Answer: **பிரெஞ்சு நாட்டை சேர்ந்த கணக்கு வல்லுநர் காஸ்பார்ட் குஸ்டாவ் கொரியாலிஸ்**

61. **பிலவான் எந்த நாட்டில் உள்ள இடம்** ?

Answer: **இந்தோனேஷியா**

62. **புலம் பெயர்ந்த தமிழர்கள் பற்றிய முதல் புதினம் எது**?

Answer: **புயலிலே ஒரு தோணி**

63. **புயலிலே ஒரு தோணியின் நூலாசிரியர் யார்**?

Answer: **ப**. **சிங்காரம்**

64. **ப சிங்காரம் எந்த இடத்தைச் சேர்ந்தவர்**?

Answer: **சிங்கம்புணரி**, **சிவகங்கை மாவட்டம்**

65. **ப**. **சிங்காரம் எந்த தினசரி நாளிதழில் பணியாற்றியுள்ளார்**?

Answer: **தினத்தந்தி**

66. "**பல் பழப் பலவின் பயங்கெழு கொல்லி**" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **அகநானூறு**

67. "**பல் பழப் பலவின் பயங்கெழு கொல்லி" இவ்வரிகளில் குறிப்பிடப்படும் இடம் எது**?

Answer: **கொல்லிமலை**

68. **கொல்லிமலை எந்த மாவட்டத்தில் அமைந்துள்ளது** ?

Answer: **நாமக்கல்**

69. "**நதியில் விளையாடி கொடியில் தலைசீவி நடந்த இளந்தென்றலே** "**இவ்வரிகளை எழுதியவர்**?

Answer: **கண்ணதாசன்**

70. **பூ உண்டு ஆனால் கண்ணிற்கு காட்சி தராமல் காண்டற்கு அரியனவாய் இருக்கும் மலர்கள் எவை**?

Answer: **ஆல மலர்;பலா மலர்**

71. **மலர் உண்டு; பெயரும் உண்டு ; ஆனால் இதுதான் அது என்று உறுதியாக அறிய இயலாதுள்ள நிலையில் இருக்கும் மலர்கள் என்னென்ன**?

Answer: **சுள்ளி மலர், பாங்கர் மலர்**

72. **அகவிதழ் முதலிய உறுப்புகள் இருந்து அவை புறத்தே காட்சி படாமல் உள்ளேயே பொதிந்திருக்கும் மலர்கள் என்னென்ன**?

Answer: **அத்தி,ஆலம் ,கொழிஞ்சி,பலா**

73. **பயன்பாடு, நாற்றம், மக்களது விருப்பில் இடம்பெறாமை ,பொதுவில் ஒதுக்கப்பட்ட மை கொண்டு மலரில் சில எளியவை ஆகின்றன. அவை என்னென்ன** ?

Answer: **நெருஞ்சி**, **எருக்கு** ,**பூளை**, **குரீஇப் பூளை**, **வேளை**, **ஊமத்தம்**, **கள்ளி**, **முருங்கை**

74. **இலுப்பை பூக்கள் என்ன சுவையுடையவை**?

Answer: **இனிப்பு**

75. **கரடிகள் பறித்து உண்ணும் மற்றும் குடிநீருக்கு தன் மனத்தை ஏற்றும் பூ எது**?

Answer: **பாதிரிப்பூ**

76. **அதோ அந்த பறவை போல எனும் நூலை எழுதியவர்**?

Answer: **ச**. **முகமது அலி**

77. **உலகின் மிகச்சிறிய தவளை எனும் நூலை எழுதியவர்**?

Answer: **எஸ் ராமகிருஷ்ணன்**

## இயல் மூன்று

பண்பாடு

# கூட்டாஞ்சோறு

1. **முன்பின் அறியாத புதியவர்களுக்கு என்ன பெயர்**?

Answer: **விருந்தினர்**

2. **விருந்தே புதுமை என அழைப்பவர் யார்**?

Answer: **தொல்காப்பியர்**

3. **இல்லறம் புரிவது விருந்தோம்பல் செய்யும் பொருட்டே எனக் கூறுபவர்** ?

Answer: **திருவள்ளுவர்**

4. **திருவள்ளுவர் ,முகம் வேறுபடாமல் முகமலர்ச்சியோடு விருந்தினரை வரவேற்க வேண்டும் என்பதை எந்த குறளில் எடுத்துரைக்கிறார்** ?

Answer: **மோப்பக் குழையும் அனிச்சம்**

5. "......**தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை" என விருந்தினரை போற்றும் முடியாத நிலையை எண்ணி வருந்துவது யார்**?

Answer: **கண்ணகி**

6. ".......**தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை" இவ்வரிகள் இடம் பெற்ற நூல்** ?

Answer: **சிலப்பதிகாரம்**

7. **கல்வியும் செல்வமும் பெற்ற பெண்கள்**, **விருந்தும் ஈகையும் செய்வதாக குறிப்பிட்டுள்ளவர் யார்**?

Answer: **கம்பர்**

8. "**பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால் வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும் விருந்தும் அன்றி விளைவன யாவையே" இந்த வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **கம்பராமாயணம்**

9. "**விருந்தினரும் வறியவரும் நெருங்கி யுண்ண மேன்மேலும் முகம் மலரும் மேலோர் போல" இந்த வரிகள் இடம் பெற்ற நூல்** ?

Answer: **கலிங்கத்துப் பரணி**

10. **கலிங்கத்துப்பரணி நூலை இயற்றியவர்**?

Answer: **செயங்கொண்டார்**

11. **தமிழரின் விருந்தோம்பல் பண்பின் அடிப்படை எது**?

Answer: **தனித்து உண்ணாமை**

12. "**உண்டால் அம்ம, இவ்வுலகம் இந்திரர் அமிழ்தம் இயைவது ஆயினும் இனிது எனத் தமியர் உண்டலும் இலரே" இவ்வரிகள் இடம்பெற்ற நூல்**?

Answer: **புறநானூறு**

13. "**உண்டால் அம்ம, இவ்வுலகம் இந்திரர் அமிழ்தம் இயைவது ஆயினும் இனிது எனத் தமியர் உண்டலும் இலரே" இவ்வரிகளை இயற்றியவர்**?

Answer: **கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி**

14. "**அல்லில் ஆயினும் விருந்து வரின் உவக்கும்" இவ்வரிகள் பெற்ற நூல்**?

Answer: **நற்றிணை**

15. "**காலின் ஏழடி பின் சென்று" இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **பொருநராற்றுப்படை**

16. "**குரல்உணங்கு விதைத்தினை உரல்வாய்ப் பெய்து சிறிது புறப்பட்டன்றோ இலள்" இவ்வரிகள் இடம்பெற்ற நூல்**?

Answer: **புறநானூறு**

17. "**நெருநை வந்த விருந்திற்கு மற்றுத் தன் இருமுறை பழவாள் வைத்தனன் இன்று" இவ்வரிகள் இடம்பெற்ற நூல்**?

Answer: **புறநானூறு**

18. **எந்த நாயன்மாரின் வரலாற்றில் வீட்டிற்கு வந்த சிவனடியாருக்கு விருந்தளிக்க விதைத்துவிட்டு வந்த நெல்லை அரித்து வந்து விருந்து படைத்த திறம் பெரிய புராணத்தில் கூறப்படுகிறது** ?

Answer: **இளையான்குடிமாற நாயனார்**

19. **நெய்தல் நிலத்தவர் பாணர்களை வரவேற்று குழல் மீன் கறியும் பிறவும் கொடுத்தனர் என கூறும் நூல் எது**?

Answer: **சிறுபாணாற்றுப்படை**

20. "**பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர் வருவீர் உளீரோ**" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **குறுந்தொகை**

21. "**மருந்தே ஆயினும் விருந்தோடு உண்**" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **கொன்றை வேந்தன்**

22. **கொன்றைவேந்தன் நூலை இயற்றியவர்**?

Answer: **ஔவையார்**

23. **யாருடைய காலங்களில் மிகுதியான சத்திரங்கள் வழிச்செல்வோருக்காக மிகுதியாக கட்டப்பட்டன**?

Answer: **நாயக்கர்**, **மராட்டியர் ஆட்சிக்காலம்**

24. **விருந்துக்குப் உணவு பரிமாற பயன்படும் வாழையிலையின் குறுகலான பகுதி எந்த பக்கம் வரவேண்டும்**?

Answer: **உண்பவரின் இடப்பக்கம்**

25. **எந்த தமிழ் சங்கம்** "**வாழையிலை விருந்து விழா**"**வை ஆண்டுதோறும் கொண்டாடி வருகின்றது** ?

Answer: **அமெரிக்காவின் மினசோட்டா தமிழ்ச் சங்கம்**

26. "**இட்டதோர் தாமரைப் பூ இதழ் விரித்து திருத்தல் போலே வட்டமாய் புறாக்கள் கூடி இரையுண்ணும்**" **இவ்வரிகளை இயற்றியவர்**?

Answer: **பாரதிதாசன்**

27. "விருந்தினனாக ஒருவன் வந்து எதிரின் வியத்தல் நன்மொழி இனிது உரைத்தல்.." இவ்வரிகள் இடம் பெற்ற நூல்?

Answer: காசிகாண்டம்

28. "ஒப்புடன் முகம் மலர்ந்தே உபசரித்து உண்மை பேசி உப்பிலாக் கூழ் இட்டாலும் உண்பதே அமிர்தமாகும் " இவ்வரிகள் இடம்பெற்ற நூல்?

Answer: விவேகசிந்தாமணி

29. காசி காண்டம் எந்த நகரத்தின் பெருமைகளை கூறுகின்ற நூல் ?

Answer: காசி நகரம்

30. காசி காண்டம் எனும் நூலை எழுதியவர் யார்?

Answer: அதிவீரராம பாண்டியர்

31. அதிவீரராம பாண்டியர் எந்த இடத்தின் அரசர்?

Answer: கொற்கை

32. அதிவீரராம பாண்டியன் இயற்றிய வேறு நூல்கள் என்னென்ன?

Answer: வெற்றிவேற்கை ,நைடதம் ,இலிங்கபுராணம் ,வாயு சங்கிதை, திருக்கருவை அந்தாதி ,கூர்ம புராணம்

33. வெற்றிவேற்கை நூலின் வேறு பெயர் என்ன ?

Answer: நறுந்தொகை

34. "நோனாச் செருவின் வலம்படு நோன்றாள் மான விறல்வேள் வயிரியம் எனினே" இவ்வரிகளில் குறிப்பிடப்படும் மன்னன் யார்?

Answer: நன்னன்

35. "நோனாச் செருவின் வலம்படு நோன்றாள் மான விறல்வேள் வயிரியம் எனினே" இவ்வரிகள் இடம் பெற்ற நூல் ?

Answer: **மலைபடுகடாம்**

36. **வள்ளலை நாடு எதிர்வரும் கூத்தனை அழைத்து யாம் இவ்விடத்தை சென்று இன்னவெல்லாம் பெற்று வருகின்றோம் நீயும் அந்த வள்ளலிடம் சென்று வளம் பெற்று வாழ்வாயாக எனக் கூறுவது**?

Answer: **ஆற்றுப்படை**

37. **மலைபடுகடாம் நூலை எழுதியவர் யார்**?

Answer: **இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார்**

38. **மலைபடுகடாம் எத்தனை அடிகளைக் கொண்டது**?

Answer: 583 **அடிகள்**

39. **மலைபடுகடாம் வேறு எவ்வாறு வழங்கப்படும்** ?

Answer: **கூத்தராற்றுப்படை**

40. **யாரை பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு கூத்தராற்றுப்படை இயற்றப்பட்டுள்ளது** ?

Answer: **நன்னன்**

41. **கோபல்லபுரத்து மக்கள் எனும் சிறுகதையை எழுதியவர்**?

Answer: **கி ராஜநாராயணன்**

42. **கோவில்பட்டியை சுற்றிய வட்டாரப் பகுதிகளில் தோன்றிய இலக்கிய வடிவம் என்ன**?

Answer: **கரிசல் இலக்கியம்**

43. **கரிசல் இலக்கியத்தின் எழுத்தாளர்கள் யார்யார்**?

Answer: **கு.அழகிரிசாமி**, **கி.ராஜ நாராயணன்** ,**பா.செயப்பிரகாசம்** ,**பூமணி**, **வீரவேலுசாமி** , **சோ.தர்மன்** ,**வேல. ராமமூர்த்தி**

44. **கி. ராஜநாராயணனின் சொந்த ஊர் எது**?

Answer: **இடைசெவல்**

45. **கோபல்லபுரத்து மக்கள் எந்த ஆண்டிற்கான சாகித்திய அகாதமி விருது பெற்றது**?

Answer: 1991

46. **எழுத்துலகில் கி.ரா. எனக் குறிப்பிடப்படுபவர் யார்**?

Answer: **கி ராஜநாராயணன்**

47. **கரிசல் வட்டார சொல் அகராதியை உருவாக்கியவர் யார்**?

Answer: **கி ராஜநாராயணன்**

48. "**கறங்கு இசை விழவின் உறந்தை**.." **இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **அகநானூறு**

49. "**கறங்கு இசை விழவின் உறந்தை**.." **இவ்வரிகளில் இடம் பெற்ற இடம்**?

Answer: **திருச்சி மாவட்டத்தின் உறையூர்**

50. "**மைக்கடல் முத்துக்கு ஈடாய் மிக்க நெல்முத்து**"-**இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **முக்கூடற்பள்ளு**

51. "**கத்துகடல் சூழ்நாகைக் காத்தான் தன் சத்திரத்தில் அத்தமிக்கும் போது அரிசி வரும்** "- **இவ்வரிகளை எழுதியவர்** ?

Answer: **காளமேகப்புலவர்**

52. **திருக்குறள் தெளிவுரை நூலை எழுதியவர்**?

Answer: **வ. உ. சிதம்பரனார்**

53. **சிறுவர் நாடோடிக் கதைகள் என்னும் நூலை எழுதியவர்**?

Answer: **கி .ராஜநாராயணன்**

54. **ஆறாம் திணை என்னும் நூலை எழுதியவர்** ?

Answer: **மருத்துவர் கு சிவராமன்**

இயல் நான்கு

*அறிவியல், தொழில்நுட்பம்*

# நான்காம் தமிழ்

1. **மொழிநடையை உருவாக்கும் மென்பொருளுக்கு என்ன பெயர்**?

Answer: **வேர்டுஸ்மித்**

2. **வாட்சன் என்பது எந்த நிறுவனத்தின் செயற்கை நுண்ணறிவு கணினி** ?

Answer: **ஐ.பி.எம்**

3. "**இங்கிவனை யான் பெறவே என்ன தவம் செய்து விட்டேன்**" **எனக் கூறியவர் யார்**?

Answer: **பாரதியார்**

4. **இலா எனும் உரையாடும் மென்பொருளை எந்த வங்கி உருவாகியுள்ளது**?

Answer: **இந்தியாவின் பாரத ஸ்டேட் வங்கி**

5. ELA **என்பதன் விரிவாக்கம் என்ன**?

Answer: Electronic live assistant

6. **பெப்பர் என்பது எந்த வங்கி உருவாக்கிய இயந்திர மனிதன்**?

Answer: **ஜப்பானின் சாப்ட்வங்கி**

7. **சீனாவில் எந்த துறைமுக நகரத்தில் சிவன் கோவில் உள்ளது**?

Answer: **சூவன்செள**

8. **சீனாவில் உள்ள சிவன் கோயில் எந்த மன்னரின் ஆணையின் கீழ் கட்டப்பட்டது** ?

Answer: **குப்லாய்கான்**

9. **சீனாவில் உள்ள சிவன் கோவிலில் எந்த கால சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளது**?

Answer: **சோழர் கால சிற்பங்கள்**

10. "**வாளால் அறுத்து சுடினும் மருத்துவன் பால் மாளாத காதல் நோயாளன் போல்** …"**இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **பெருமாள் திருமொழி**

11. **பெருமாள் திருமொழி என்னும் நூலை எழுதியவர் யார்**?

Answer: **குலசேகர ஆழ்வார்**

12. **வித்துவக்கோடு எனும் ஊர் எங்கு உள்ளது**?

Answer: **கேரள மாநிலம் ,பாலக்காடு மாவட்டம்**

13. **பெருமாள் திருமொழி நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் எத்தனையாவது திருமுறையாக வைக்கப்பட்டுள்ளது**?

Answer: **ஐந்தாம் திருமொழி**

14. **பெருமாள் திருமொழியில் எத்தனை பாடல்கள் உள்ளன**?

Answer: 105

15. **குலசேகர ஆழ்வாரின் காலம் என்ன**?

Answer: **எட்டாம் நூற்றாண்டு**

16. "**விசும்பில் ஊழி ஊழ் ஊழ் செல்ல**, **கருவளர் வானத்து இசையில் தோன்றி**" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **பரிபாடல்**

17. "**விசும்பில் ஊழி ஊழ் ஊழ் செல்ல, கருவளர் வானத்து இசையில் தோன்றி**" **இப்பரிபாடல் பாடலை இயற்றியவர் யார்**?

Answer: **கீரந்தையார்**

18. **எந்த அமெரிக்க வானியல் வல்லுநர் நம் பால்வீதி போன்று பல பால் விதிகள் உள்ளன என நிரூபித்தார்** ?

Answer: **எட்வின் ஹப்பிள்**,1924

19. "**அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்**…" **இவ்வரிகள் இடம்பெற்ற நூல்**?

Answer: **திருவாசகம்**

20. **திருவாசகத்தை இயற்றியவர்**?

Answer: **மாணிக்கவாசகர்**

21. **சங்க நூல்களில் பண்ணோடு பாடப்பட்ட நூல் எது** ?

Answer: **பரிபாடல்**

22. **பரிபாடலில் எத்தனை பாடல்கள் இருப்பதாக கூறப்படுகிறது**?

Answer: 70 **பாடல்கள்**

23. **பரிபாடலில் கிடைக்கப் பெற்றுள்ள பாடல்கள்**?

Answer: 24 **பாடல்கள்**

24. **பெரியார் அறிவியல் தொழில்நுட்ப கழகம் எந்த ஆண்டு நிறுவப்பட்டது**?

Answer: 1988

25. **இந்தியாவிலேயே முதன்முதலாக** 360 **பாகை அரைவட்ட வானத்திரை எங்கு உள்ளது**?

Answer: **பெரியார் அறிவியல் தொழில்நுட்ப கழகம்**

26. **இந்தியாவிலேயே முதன்முதலாக** 360 **பாகை அரைவட்ட வானத்திரை எப்போது தொடங்கப்பட்டது**?

Answer: 2009

27. **தற்காலத்தின் ஐன்ஸ்டீன் என புகழப்படுபவர் யார்** ?

Answer: **ஸ்டீபன் ஹாக்கிங்**

28. **ஸ்டீபன் ஹாக்கிங்ஸ் எந்த ஆண்டு பக**#3021;**கவாதம்**(amyotrophic lateral sclerosis) **எனும் நரம்பு நோயால் பாதிக்கப்பட்டார்**?

Answer: 1963 (21 **வயது**)

29. **ஸ்டீபன் ஹாக்கிங்ஸ் எந்த ஆண்டு மூச்சுக்குழாய் தடங்கலால் பேசும் திறனை இழந்தார்** ?

Answer: 1985

30. "**பிரபஞ்சத்தை இயக்கும் ஆற்றலாக கடவுள் என்ற ஒருவரை கட்டமைக்க வேண்டியதில்லை**" **எனக் கூறியவர்**?

Answer: **ஸ்டீபன் ஹாக்கிங்ஸ்**

31. "**சில நேரங்களில் உண்மை புனைவை விடவும் வியப்பூட்டுவதாக அமைந்துவிடுகிறது**. **அப்படி ஒரு உண்மைதான் கருந்துளைகள் பற்றியதும்**. **புனைவு இலக்கியம் படைப்பவர்களது கற்பனை எல்லாம் மிஞ்சுவதாகவே கருந்துளைகள் பற்றிய உண்மைகள் உள்ளன**. **அதனை அறிவியல் உலகம் மிக மெதுவாகவே புரிந்து கொள்ள முயல்கிறது** " **எனக் கூறியவர் யார்** ?

Answer: **ஸ்டீபன் ஹாக்கிங்ஸ்**

32. **கருந்துளை என்ற சொல்லையும் கோட்பாட்டையும் முதலில் குறிப்பிட்டவர் யார்**?

Answer: **ஜான் வீலர்**

33. ஸ்டீபன் ஹாக்கின்ஸின் கருந்துளைகள் பற்றிய ஆராய்ச்சி முடிவு எவ்வாறு அழைக்கப்படுகிறது ?

Answer: ஹாக்கிங் கதிர்வீச்சு

34. கருந்துளை என்பது படைப்பின் ஆற்றல் என நிறுவியவர் யார் ?

Answer: ஸ்டீபன் ஹாக்கிங்ஸ்

35. ஸ்டீபன் ஹாக்கிங்ஸ் நியூட்டன் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் என்ன மதிப்புமிக்க பதவியை வகித்திருக்கிறார்?

Answer: லூகாசியன் பேராசிரியர்

36. ஸ்டீபன் ஹாக்கிங்ஸ் பெற்ற விருதுகள் என்னென்ன?

Answer: அமெரிக்காவின் உயரிய விருதான அதிபர் விருது, ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் விருது, உல்ஃப் விருது , காப்ளி பதக்கம், அடிப்படை இயற்பியல் பரிசு

37. ஸ்டீபன் ஹாக்கிங்ஸ் யாருடைய நினைவு நாளில் பிறந்தார் ?

Answer: கலிலியோ (ஐன்ஸ்டைனின் பிறந்தநாளில் இறந்தார்)

38. "தலைவிதி தான் வாழ்க்கையை தீர்மானிக்கிறது என நம்புபவர்களை பார்த்தால் எனக்கு சிரிப்புதான் வருகிறது . விதி தான் தீர்மானிக்கிறது என்றால் சாலையை கடக்கும் போது ஏன் இருபுறமும் பார்த்து கிடக்கிறார்கள்" எனக்கூறியவர் ?

Answer: ஸ்டீபன் ஹாக்கிங்ஸ்

39. எந்த ஆண்டு நடைபெற்ற பாரா ஒலிம்பிக் போட்டிகளின்" தொடக்க விழா நாயகர்" என்ற சிறப்பை ஸ்டீபன் ஹாக்கிங்ஸ் பெற்றார் ?

Answer: 2012

40. ஸ்டீபன் ஹாக்கின்ஸ் எந்த தொலைக்காட்சி தொடர்களில் பங்கேற்றார் ?

Answer: **அடுத்த தலைமுறை ,பெருவெடிப்புக் கோட்பாடு**

41. **ஸ்டீபன் ஹாக்கிங்ஸ் எழுதிய நூல்களுள் எந்த நூல்** 40 **மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டது**?

Answer: **காலத்தின் சுருக்கமான வரலாறு**

42. **காலத்தின் சுருக்கமான வரலாறு எந்த ஆண்டு வெளிவந்தது**?

Answer:

43. " **கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் கோதை திரு மா வியல் நகர்க் கருவூர் முன்துறை**" **இவ்வரரிகள் இடம் பெற்ற நூல்** ?

Answer: **அகநானூறு**

44. " **கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் கோதை திரு மா வியல் நகர்க் கருவூர் முன்துறை**" **இவ்வரரிகளில் குறிப்பிடப்படும் ஊர் எது** ?

Answer: **கரூர் மாவட்டத்தின் கருவூர்**

45. "**அறிவைவிட மிகவும் முக்கியமானது கற்பனைத்திறன் .ஏனெனில் அறிவு என்பது நாம் தற்போது அறிந்தும் புரிந்தும் வைத்திருப்பதோடு முடிந்துவிடுகிறது .கற்பனைத் திறனோ இந்த ஒட்டுமொத்த பேரண்டத்தையும் அளப்பது. இன்று நாம் அறிந்திருப்பதை மட்டுமன்று; இனி நாம் அறிந்து க்கொள்ளப்போவதையும் உள்ளடக்கியது**" **எனக் கூறியவர்**?

Answer: **ஐன்ஸ்டீன்**

46. "**வாழ்க்கை எவ்வளவு கடினமானதாக இருந்தாலும் வெற்றிக்கான வழி அதில் இருக்கவே செய்கிறது. நிச்சயம் என ஆராய்ச்சியில் நான் வெல்வேன் அதன் மூலம் மனித இனம் தொடர வழிவகுப்பேன்**" **எனக் கூறியவர்** ?

Answer: **ஸ்டீபன் ஹாக்கிங்**

47. "**நிலாவையும் வானத்து மீனையும் காற்றையும் நேர்பட வைத்தாங்கே குலாவும் அமுதக் குழம்பைக் குடிதொரு கோல வெறிபடைத்தோம்" இவ்வரிகளை இயற்றியவர் யார்**?

Answer: **பாரதியார்**

48. **பஞ்ச பூதங்களின் அறிவியல் கதைகள் என்னும் நூலை எழுதியவர்** ?

Answer: **நீலமணி**

49. **அன்றாட வாழ்வில் அறிவியல் என்னும் நூலை எழுதியவர்**?

Answer: **ச. தமிழ்ச்செல்வன்**

50. **காலம் எனும் நூலை எழுதியவர்**?

Answer: **ஸ்டீபன் ஹாக்கிங்**



இயல் ஐந்து

*கல்வி*

## மணற்கேணி

1. "**ஒரு மொழியில் உணர்த்தப்பட்டதை வேறொரு மொழியில் வெளியிடுவது மொழிபெயர்ப்பு" என கூறியவர்**?

Answer: **மணவை முஸ்தபா**

2. "**ஒரு மொழி வளம் பெறவும் உலகத்துடன் உறவு கொள்ளவும் மொழிபெயர்ப்பு இன்றியமையாததாகும்**. **உலக நாகரிக வளர்ச்சிக்கும் பொருளியல் மேம்பாட்டிற்கும் மொழிபெயர்ப்பும் ஒரு காரணமாகும் என கூறியவர்**?

Answer: **மூ**.**கு**. **ஜகந்நாதராஜா**

3. **மொழிபெயர்த்தல் என்ற தொடரை தொல்காப்பியர் எங்கு குறிப்பிட்டுள்ளார்**?

Answer: **மரபியல்**

4. "**மாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரி சங்கம்வைத்தும்** .."**இக்குறிப்பு காணப்படும் செப்பேடு**?

Answer: **சின்னமனூர்ச் செப்பேடு**

5. **வடமொழி கதைகளை தழுவி தமிழில் படைக்கப்பட்ட காப்பியங்கள் என்னென்ன**?

Answer: **பெருங்கதை** ,**சீவகசிந்தாமணி** ,**கம்பராமாயணம்** ,**வில்லிபாரதம்**

6. **ஷேக்ஸ்பியர் எந்த மொழியில் மொழி பெயர்ப்பின் மூலம் அறிமுகமானார்**?

Answer: **ஜெர்மன்**

7. **கீதாஞ்சலி நூலை எழுதியவர் யார்** ?

Answer: **ரவீந்திரநாத் தாகூர்**

8. **கீதாஞ்சலி நூல் எந்த மொழியில் எழுதப்பட்டது**?

Answer: **வங்கமொழி**

9. **ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சியை எதனைக் கொண்டு மதிப்பிடுவார்கள்** ?

Answer: **ஒரு நாடு எவ்வளவு மின்னாற்றலை பயன்படுத்துகிறது என்பதை கொண்டு**

10. **வால்காவிலிருந்து கங்கை வரை என்ற நூலை எழுதியவர் யார்**?

Answer: **ராகுல் சாங்கிருத்யாயன்**

11. **வால்காவிலிருந்து கங்கை வரை என்ற நூல் எந்த மொழியில் எப்போது எழுதப்பட்டது**?

Answer: **இந்திமொழி**, 1942

12. **வால்காவிலிருந்து கங்கை வரை என்ற நூலை யார் தமிழில் மொழிபெயர்த்தார்**?

Answer: **கண முத்தையா**

13. **வால்காவிலிருந்து கங்கை வரை என்ற நூல் எப்போது தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது**?

Answer: 1949

14. **வால்காவிலிருந்து கங்கை வரை என்ற நூலை யார்** 2016**ஆம் ஆண்டு மொழிபெயர்த்தவர்**?

Answer: **டாக்டர் என்**. **ஸ்ரீதர்**, **முத்து மீனாட்சி**

15. **வால்காவிலிருந்து கங்கை வரை என்ற நூலை யார்** 2018**ஆம் ஆண்டு மொழிபெயர்த்தவர்**?

Answer: **யூமா வாசுகி**

16. **ஜெர்மனியில் ஓராண்டில் பிறமொழிகளிலிருந்து எத்தனை நூல்கள் வரை மொழிபெயர்க்கப்படுகின்றன**?

Answer: 5000

17. **ஜெர்மனியில் மொழிபெயர்க்கப்படும் வரிசையில் எந்த மொழி முதலிடம் வகிக்கிறது**?

Answer: **ஆங்கிலம்**

18. **கருத்துப் பகிர்வு தருவதால் மொழிபெயர்ப்பை எவ்வாறு குறிப்பிடுவார்கள்**?

Answer: **பயன்கலை**

19. "**காசினியில் இன்று வரை அறிவின் மன்னர் கண்டுள்ள கலைகள் எல்லாம் தமிழில் எண்ணி பேசி மகிழ் நிலை வேண்டும் என குறிப்பிடுபவர் யார்**?

Answer: **குலோத்துங்கன்**

20. "**சென்றிடுவீர் எட்டுத்திக்கும் கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்**" **என கூறியவர் யார்**?

Answer: **பாரதியார்**

21. "**தேமதுரத் தமிழோசை உலகமெல்லாம் பரவும்வகை செய்தல் வேண்டும்**" **எனக் கூறியவர்**?

Answer: **பாரதியார்**

22. **எங்குள்ள தேசிய நூற்கூடத்தில் ஏறக்குறைய ஆயிரம் பழைய தமிழ் ஏடுகளும் கையெழுத்துப் படிகளும் உள்ளன**?

Answer: **பிரான்ஸ்**

23. "**மாணிக்கவாசகர் பிள்ளைத்தமிழ் ,சரளிப்புத்தகம் ,புதுச்சேரி அம்மன் பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களும் பிரான்ஸ் தேசிய நூலகத்தில் உள்ளதாக கூறியவர் யார்** ?

Answer: **தனிநாயக அடிகள்**

24. "**அருளைப் பெருக்கி அறிவைத் திருத்தி மருளை யகற்றி மதிக்கும்**…" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **நீதிநெறி வெண்பா**

25. **ஒரே நேரத்தில் நிகழ்த்தப்படும் நூறு செயல்களை நினைவில் கொண்டு விடையிளித்தலுக்கு என்ன பெயர்**?

Answer: **சதாவதானம்**

26. **செய்குதம்பி பாவலர் எங்கு பிறந்தார்**?

Answer: **கன்னியாகுமரி மாவட்டம் இடலாக்குடி**

27. **செய்குத்தம்பி பாவலரின் காலம் என்ன**?

Answer: 1874 -1950

28. **செய்குதம்பி பாவலர் எந்த வயதிலேயே செய்யுள் இயற்றும் திறன் பெற்றிருந்தார்** ?

Answer: 15

29. **செய்கு தம்பி பாவலர் சென்னை விக்டோரியா அரங்கத்தில் எப்போது சதாவதானி பட்டம் பெற்றார்** ?

Answer: **மார்ச்** 10, 1907

30. **செய்குதம்பி பாவலரின் மணிமண்டபமும் பள்ளியும் எங்கு உள்ளது** ?

Answer: **இடலாக்குடி**

31. **இடைக்காடன் பிணக்குத் தீர்த்த படலம் திருவிளையாடல் புராணத்தில் எந்த காண்டத்தில் உள்ளது**?

Answer: **திரு ஆலவாய் காண்டம்**

32. **இடைக்காடனை அவமதித்த மன்னன் யார்**?

Answer: **குசேல பாண்டியன்**

33. **இடைக்காடன் யாருடைய நண்பர்**?

Answer: **கபிலர்**

34. "**கழிந்த பெரும் கேள்வியினான் எனக் கேட்டு முழுதுணர்ந்த கபிலன்**..." **இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **திருவிளையாடல் புராணம்**

35. **மோசிகீரனாருக்கு கவரி வீசிய மன்னன் யார்**?

Answer: **தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை**

36. "**மாசற விசித்த வார்புறு வள்பின்**.." **இவ்வரிகள் இடம் பெற்ற நூல்** ?

Answer: **புறநானூறு**

37. **திருவிளையாடற்புராணம் நூலை இயற்றியவர் யார்**?

Answer: **பரஞ்சோதி முனிவர்**

38. **திருவிளையாடற் புராணத்தில் எத்தனை காண்டங்கள் உள்ளன** ?

Answer: **மூன்று** :**மதுரைக்காண்டம் கூடற்காண்டம் திருவாலவாய்க் காண்டம்**

39. **திருவிளையாடல் புராணம் எத்தனை படலங்கள் உடையது**?

Answer: 64 **படலங்கள்**

40. **பரஞ்சோதி முனிவர் எங்கு பிறந்தார்**?

Answer: **திருமறைக்காடு** (**வேதாரண்யம்**)

41. **பரஞ்சோதி முனிவரின் காலம் என்ன**?

Answer: **பதினேழாம் நூற்றாண்டு**

42. **பரஞ்சோதி முனிவர் இயற்றிய வேறு நூல்கள் என்னென்ன**?

Answer: **வேதாரண்ய புராணம்**, **திருவிளையாடல் போற்றிக் கலிவெண்பா**, **மதுரை பதிற்றுப்பத்தந்தாதி**

43. **உனக்கு படிக்க தெரியாது என்னும் சிறுகதையை எழுதியவர் யார்**?

Answer: **கமலாலயன்**

44. **உனக்கு படிக்க தெரியாது என்ற தலைப்பில் யாருடைய வாழ்க்கையை நூலாகப் படைத்துள்ளார் கமலாலயன்** ?

Answer: **அமெரிக்க கருப்பின பெண்மணி மேரி மெக்லியோட் பெத்யூன்**

45. **கமலாலயன் இயற்பெயர் என்ன** ?

Answer: **வே. குணசேகரன்**

46. "**கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை** "**இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **ஐங்குறுநூறு**

47. "**கொற்கைக் கோமான் கொற்கையம் பெருந்துறை** "**இவர்களில் குறிப்பிடப்படும் ஊர்**?

Answer: **தூத்துக்குடி மாவட்டத்தின் கொற்க்கை**

48. "**கற்கை நன்றே கற்கை நன்றே பிச்சை புகினும் கற்கை நன்றே** " **இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **வெற்றிவேற்கை**

49. "**வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு**" **என கூறியவர்**?

Answer: **பாரதியார்**

50. "**நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்**" **என கூறியவர்** ?

Answer: **பாரதியார்**

51. "**அறைக்குள் யாழிசை ஏதென்று சென்று எட்டிப் பார்த்தேன் பேத்தி நெட்டுருப் பண்ணினாள் நீதி நூல் திரட்டையே**" **இவ்வரிகளை எழுதியவர்**?

Answer: **பாரதிதாசன்**

52. **சிறந்த சிறுகதைகள் பதின்மூன்று எனும் நூலை எழுதியவர் யார்** ?

Answer: **தமிழில் -வல்லிக்கண்ணன்**

53. **குட்டி இளவரசன் என்னும் நூலை எழுதியவர் யார்**?

Answer: **தமிழில் -வே. ஸ்ரீராம்**

54. ஆசிரியரின் டைரி என்ற நூலை எழுதியவர் யார் ?

Answer: தமிழில்- எம் பி அகிலா

இயல் ஆறு

கலை, அழகியல், புதுமை

# நிலா முற்றம்

1. கரகம் எனும் பித்தளை செம்பையோ சிறிய குடத்தையோ தலையில் வைத்து தாளத்திற்கு ஏற்ப ஆடுவது எவ்வாறு அழைக்கப்படும்?

Answer: கரகாட்டம்

2. கரகாட்டத்திற்கு வழங்கப்படும் வேறு பெயர்கள் என்னென்ன ?

Answer: கரகம், கும்பாட்டம்

3. "நீரற வறியாக் கரகத்து" இவ்வரிகள் இடம் பெற்ற நூல்?

Answer: புறநானூறு

4. 11 வகை ஆடல்கள் பற்றி குறிப்பிடும் நூல்?

Answer: சிலப்பதிகாரம்

5. மாதவி ஆடிய 11 வகை ஆடல்களில் எந்த ஆடல் கரகாட்டத்திற்கு அடிப்படை என்று கருதப்படுகிறது?

Answer: குடக்கூத்து

6. மயில் வடிவ கூட்டுக்குள் ஒருவர் தன் உருவத்தை மறைத்துக் கொண்டு நையாண்டி மேளத்திற்கேற்ப ஆடும் ஆட்டத்திற்கு பெயரென்ன ?

Answer: மயிலாட்டம்

7. **கரகாட்டத்தின் துணை ஆட்டமாக ஆடப்படுவது எது**?

Answer: **மயிலாட்டம்**

8. **கா என்பதற்கு என்ன பொருள்**?

Answer: **பாரம் தாங்கும் கோல்**

9. **ஒரே நிறத் துணியை முண்டாசு போல கட்டியும் காலில் சலங்கை அணிந்து கையில் வைத்துள்ள சிறு துணியை இசைக்கேற்ப வீசி ஆடும் ஆட்டத்திற்கு பெயர் என்ன** ?

Answer: **ஒயிலாட்டம்**

10. **ஒயிலாட்டத்தை பெரும்பாலும் யார் ஆடுவார்கள்**?

Answer: **ஆண்கள்**

11. **வானத்து தேவர்கள் ஆடிய ஆட்டம் என பொருள் கொள்ளப்படுவது**?

Answer: **தேவராட்டம்**

12. **ஆண்கள் மட்டுமே ஆடும் ஆட்டம் எது**?

Answer: **தேவராட்டம்**

13. **தேவராட்டத்திற்குரிய இசைக்கருவி எது** ?

Answer: **உறுமி**

14. **உறுமி வேறு எவ்வாறு அழைக்கப்படும்**?

Answer: **தேவதுந்துபி**

15. **தேவராட்டத்தில் எத்தனை கலைஞர்கள் கலந்து கொள்ள வேண்டும் என்பது பொது மரபாக உள்ளது**?

Answer: 8 **முதல்** 13 **கலைஞர்கள்**

16. **தேவராட்டம் போன்றே ஆடப்பட்டு வருகின்ற கலை எது** ?

Answer: **சேவையாட்டம்**

17. **பொய்க்கால் குதிரையாட்டத்திற்கு வழங்கப்படும் வேறு பெயர்கள் என்னென்ன**?

Answer: **புரவியாட்டம் ,புரவி நாட்டியம்**

18. **பொய்க்கால் குதிரையாட்டம் யாருடைய காலத்தில் தஞ்சைக்கு வந்ததாக கூறப்படுகிறது**?

Answer: **மராட்டியர் காலம்**

19. **எந்த ஆட்டத்திற்கு பாடல்கள் பயன்படுத்தப்படுவதில்லை** ?

Answer: **பொய்க்கால் குதிரை ஆட்டம்**

20. **பொய்க்கால் குதிரையாட்டம் ராஜஸ்தானில் எவ்வாறு அழைக்கப்படுகிறது**?

Answer: **கச்சிக்கொடி**

21. **பொய்க்கால் குதிரையாட்டம் கேரளத்தில் எவ்வாறு அழைக்கப்படுகிறது** ?

Answer: **குதிரைக்களி**

22. **தப்பு என்றதோர் கருவியை இசைத்துக் கொண்டே அதன் இசைக்கு ஏற்ப ஆடப்படும் நிகழ்கலைக்கு பெயர் என்ன**?

Answer: **தப்பாட்டம்**

23. "**தந்தகக என்று தாளம் பதலை திமிலைதுடி தம்பட்ட மும்பெருக**"**இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**& **ஆசிரியர் யார்**?

Answer: **திருப்புகழ் ,அருணகிரிநாதர்**

24. **ஒன்றை சொல்வதென்றே இசைக்கப்படும் இசைக்கவல்ல தாளக் கருவி எது**?

Answer: **பறை**

25. **எந்த நூலில் கருப்பொருள்களில் ஒன்றாக பறை இடம்பெற்றுள்ளது** ?

Answer: **தொல்காப்பியம்**

26. **நாட்டுப்புற மக்களால் நிகழ்த்தப்பட்டு வரும் கலைக்கு என்ன பெயர்** ?

Answer: **தெருக்கூத்து**

27. **எந்தக் கலையில் ஒரு கதையை இசை, வசனம், ஆடல், பாடல் மெய்ப்பாடு ஆகியவற்ற- ஒருங்கிணைத்து வழங்குவர்**?

Answer: **தெருக்கூத்து**

28. **திரௌபதி அம்மன் வழிபாட்டின் ஒரு பகுதியாக எந்த கலை இருக்கிறது**?

Answer: **தெருக்கூத்து**

29. "**நாடகக் கலையை மீட்டெடுப்பது தமது குறிக்கோள்" என கூறியவர் யார்**?

Answer: **கூத்துப்பட்டறை ந.முத்துசாமி என்ற கலை ஞாயிறு**

30. **ந.முத்துசாமி பெற்ற விருதுகள் என்னென்ன**?

Answer: **இந்திய அரசின் தாமரைத்திரு விருது, தமிழ்நாடு அரசின் கலைமாமணி விருது**

31. **வேளாண்மை செய்வோரின் கலையாக இருந்தது எது**?

Answer: **தெருக்கூத்து**

32. **தோலாலான பாவையை கொண்டு நிகழ்த்தும் கலைக்கு என்ன பெயர்** ?

Answer: **தோற்பாவைக் கூத்து**

33. **மரப்பாவையை பற்றி குறிப்பிடும் நூல் எது** ?

Answer: **திருக்குறள்**

34. **எந்த நூலில் தோற்பாவைக் கூத்து பற்றிய செய்திகளை காண முடிகிறது**?

Answer: **திருவாசகம் ,பட்டினத்தார் பாடல்**

35. **எந்த நாட்டில் இராச சோழன் தெரு என்பது இன்றும் உள்ளது**?

Answer: **மலேசிய தலைநகர் கோலாலம்பூர்**

36. "**சாந்தமானதொரு பிரபஞ்சத்தை சுமக்கின்றன ஒல்லித் தண்டுகள்**"

**இவ்வரிகளை இயற்றியவர்**?

Answer: **உமா மகேஸ்வரி**

37. **கவிஞர் உமா மகேஸ்வரி எங்கு பிறந்தார்**?

Answer: **மதுரை மாவட்டம்**

38. **கவிஞர் உமா மகேஸ்வரி படைத்த கவிதைத் தொகுதிகள் என்னென்ன** ?

Answer: **நட்சத்திரங்களின் நடுவே ,வெறும் பொழுது ,கற்பாவை**

39. "**செம்பொ னடிச்சிறு கிங்கிணியோடு சிலம்பு கலந்தாட**" **இவ்வரிகள் இடம்**

**பெற்ற நூல்** ?

Answer: **முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்**

40. **முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழை இயற்றியவர் யார்**?

Answer: **குமரகுருபரர்**

41. **செங்கீரைச்செடி காற்றில் ஆடுவது போன்று குழந்தையின் தலை எந்த**

**மாதங்களில் மென்மையாக அசையும்**?

Answer: **ஐந்து முதல் ஆறாம் மாதங்களில்**

42. **சிற்றிலக்கிய வகைகள் எத்தனை**?

Answer: 96

43. **இறைவனையோ ,தலைவரையோ, அரசனையோ பாட்டுடைத் தலைவராகக்**

**கொண்டு அவரை குழந்தையாகக் கருதி பாடப்படும் இலக்கியம் எது**?

Answer: **பிள்ளைத்தமிழ்**

44. **பிள்ளைத்தமிழில் எத்தனை பருவங்கள் இடம்பெறும்**?

Answer: 10

45. **பிள்ளைத்தமிழில் பருவங்களுக்கு எத்தனை பாடல்கள் இடம்பெறும்**?

Answer: **பத்து பாடல்**

46. **பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் இடம்பெறும் மொத்த பாடல்கள் எண்ணிக்கை**?

Answer: **நூறு பாடல்கள்**

47. **குமரகுருபரரின் காலம் எது** ?

Answer: **பதினேழாம் நூற்றாண்டு**

48. **குமரகுருபரர் எந்தெந்த மொழிகளில் புலமை பெற்றவர்** ?

Answer: **தமிழ் வடமொழி இந்துஸ்தானி**

49. **குமரகுருபரர் இயற்றிய நூல்கள் என்னென்ன**?

Answer: **கந்தர் கலிவெண்பா**, **மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்**, **மதுரைக் கலம்பகம்**, **சகலகலாவல்லி மாலை**, **நீதிநெறி விளக்கம்** ,**திருவாரூர் மும்மணிக்கோவை**

50. **பிள்ளைத்தமிழில் இருபாலருக்கும் பொதுவான பருவங்கள் என்னென்ன**?

Answer: **காப்பு** ,**செங்கீரை**, **தால்**, **சப்பாணி** ,**முத்தம்**, **வருகை**, **அம்புலி**

51. **ஆண்பாற் பிள்ளைத்தமிழ்க்குரிய கடைசி மூன்று பருவங்கள் என்னென்ன**?

Answer: **சிற்றில்**, **சிறுபறை** ,**சிறுதேர்**

52. **பெண்பாற் பிள்ளைத் தமிழுக்கு உரிய கடைசி மூன்று பருவங்கள் என்னென்ன**?

Answer: **கழங்கு**, **அம்மானை** ,**ஊசல்**

53. "**கம்பன் இசைத்த கவி எல்லாம் நான்**" **எனப் பெருமை படுபவர் யார்**?

Answer: **பாரதியார்**

54. "**தாதுகு சோலை தோறும் செண்பகக் காடு தோறும்**…" **இவ்வரிகள் இடம்பெற்ற காண்டம்** & **நூல் எது** ?

Answer: **பால காண்டம்** -**ஆற்றுப்படலம்**, **கம்பராமாயணம்**

55. "**தண்டலை மயில்கள் ஆட தாமரை விளக்கம் தாங்க**.." **இவ்வரிகள் இடம்பெற்ற காண்டம்** & **நூல் எது** ?

Answer: **பால காண்டம்** -**நாட்டுப்படலம்**, **கம்பராமாயணம்**

56. "**வண்மையில்லை யோர்வறுமை யின்மையால்**" **இவ்வரிகள் இடம்பெற்ற காண்டம்** & **நூல் எது** ?

Answer: **பால காண்டம்** -**நாட்டுப்படலம்**, **கம்பராமாயணம்**

57. "**வெய்யோன் ஒளி தன் மேனியில் விரி சோதியில் மறைய**" **இவ்வரிகள் இடம்பெற்ற காண்டம்** & **நூல் எது** ?

Answer: **அயோத்தியா காண்டம்** -**கங்கைப்படலம்**, **கம்பராமாயணம்**

58. "**ஆளு நெடுந்திரை ஆறு கடந்து இவர் போவாரோ**?" **இவ்வரிகள் இடம்பெற்ற காண்டம்** & **நூல் எது** ?

Answer: **அயோத்தியா காண்டம் கங்கைகாண் படலம்**, **கம்பராமாயணம்**

59. ""**உறங்குகின்ற கும்பகன்ன**! **உங்கள் மாய வாழ்வெலாம் இறங்குகின்றது**…" **இவ்வரிகள் இடம்பெற்ற காண்டம்** &**நூல் எது** ?

Answer: **யுத்த காண்டம்** -**கும்பகருணன் வதைப் படலம்**, **கம்பராமாயணம்**

60. **கம்பர் ராமனது வரலாற்றை தமிழில் வழங்கி தன் நூலுக்கு என்ன பெயரிட்டார்**?

Answer: **இராம அவதாரம்**

61. **கம்ப ராமாயணம் எத்தனை காண்டங்கள் கொண்டது**?

Answer: **ஆறு காண்டங்கள்**

62. **கம்பரை பாராட்டி வழங்கப்படும் முதுமொழிகள் என்னென்ன**?

Answer: **கல்வியில் பெரியவர் கம்பர் ,கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்**, **விருத்தமெனும் ஒன்பாவிற்கு உயர் கம்பன்**

63. **கம்பர் எந்த ஊரைச் சேர்ந்தவர்**?

Answer: **சோழநாட்டு திருவழுந்தூர்**

64. **கம்பரை ஆதரித்த வள்ளல் யார்** ?

Answer: **திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளல்**

65. **கம்பர் இயற்றிய வேறு நூல்கள் என்னென்ன**?

Answer: **சரஸ்வதி அந்தாதி ,சடகோபர் அந்தாதி**, **திருக்கை வழக்கம்**, **ஏரெழுபது**, **சிலையெழுபது**

66. **பாய்ச்சல் எனும் சிறுகதை எந்த சிறுகதைத் தொகுப்பில் இடம்பெற்றுள்ளது**?

Answer: **தக்கையின் மீது நான்கு கண்கள்**

67. **தக்கையின் மீது நான்கு கண்கள் எனும் நூலை இயற்றியவர் யார்** ?

Answer: **சா கந்தசாமி**

68. **சா.கந்தசாமி எந்த இடத்தைச் சேர்ந்தவர்** ?

Answer: **மயிலாடுதுறை ,நாகப்பட்டினம்**

69. **சா.கந்தசாமி தனது எந்த புதினத்தால் எழுத்துலகில் புகழ் பெற்றார்** ?

Answer: **சாயாவனம்**

70. **சா.கந்தசாமியின் எந்த புதினத்திற்கு சாகித்ய அகாடமி விருது கிடைத்தது**?

Answer: **விசாரணை கமிஷன்**

71. **சா கந்தசாமி எழுதிய நூல்கள் என்னென்ன**?

Answer: **தொலைந்து போனவர்கள், சூரியவம்சம் , சாந்தகுமாரி மற்றும்** 150 **க்கும் மேற்பட்ட சிறுகதைகள்** 11 **க்கும் மேற்பட்ட புதினங்கள்**

72. "**ஓங்கு இரும் பரப்பின் வங்க ஈட்டத்து தொண்டியோர்**"**இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **சிலப்பதிகாரம் ஊர்காண் காதை**

73. "**ஓங்கு இரும் பரப்பின் வங்க ஈட்டத்து தொண்டியோர்**"**இவ்வரிகளில் குறிப்பிடப்படும் ஊர் எது**?

Answer: **ராமநாதபுரம் மாவட்டத்தின் தொண்டி**

74. **தேன்மழை நூலின் ஆசிரியர்** ?

Answer: **சுரதா**

75. **திருக்குறள் நீதி இலக்கியம் நூலின் ஆசிரியர்** ?

Answer: **திருநாவுக்கரசு**

76. **நாட்டார் கலைகள் நூலின் ஆசிரியர்**?

Answer: **கா.பெருமாள்**

இயல் ஏழு

*நாகரிகம், நாடு, சமூகம்*

# விதை நெல்

1. **காந்தியடிகள் சத்தியாகிரகம் என்ற அறப்போர் முறையை தென்னாப்பிரிக்காவில் தொடங்கிவைத்த ஆண்டு**?

Answer: 1906

2. வ உ சிதம்பரனார் ஆங்கிலேயர்களுக்கு எதிராக சுதேசி கப்பல் நிறுவனத்தை எந்த ஆண்டு தொடங்கினார் ?

Answer: 1906

3. மா பொ சிவஞானம் எப்போது பிறந்தார்?

Answer: ஜூன் 26, 1906

4. மா பொ சிவஞானம் எங்கு பிறந்தார்?

Answer: சென்னை ஆயிரம் விளக்கு வட்டம் ,சால்வன்குப்பம்

5. மா.பொ. சிவஞானத்தின் பெற்றோர் யார்?

Answer: பொன்னுசாமி -சிவகாமி

6. மா.பொ. சிவஞானத்தின் இயற்பெயர் என்ன?

Answer: ஞானப்பிரகாசம்

7. சரபையர் என்ற முதியவர் மா.பொ. சிவஞானத்தின் பெயரை எவ்வாறு அழைத்தார் ?

Answer: சிவஞானி

8. மா.பொ. சிவஞானத்தின் கேள்வி ஞானத்தை பெருக்கிய பெருமை யாரைச் சேரும்?

Answer: திருப்பாதிரிப்புலியூர் ஞானியாரடிகள்

9. காந்தி-இர்வின் ஒப்பந்தம் எந்த ஆண்டு கையெழுத்திடப்பட்டது ?

Answer: 1931

10. எந்த ஆண்டு "தமிழா! துள்ளி எழு" தலைப்புடைய துண்டறிக்கையை மா.பொ.சி வழங்கியதற்காக சிறையில் அடைக்கப்பட்டார்?

Answer: 30.09.1932

11. **வடக்கெல்லை தமிழ் மக்களை ஒருங்கிணைத்து தமிழ் உணர்வு கொள்ளசெய்தழன் யார்**?

Answer: **தமிழாசான் மங்கலங்கிழார்**

12. "**தமிழினத்தை ஒன்றுபடுத்த எடுத்துக்கொண்ட முயற்சிக்கு பயன்படக்கூடிய ஓர் இலக்கியம் தமிழில் உண்டென்றால் அது சிலப்பதிகாரத்தை தவிர வேறு ஒன்று இல்லை" எனக் கூறியவர் யார்** ?

Answer: **மா. பொ சிவஞானம்**

13. **தமிழ்நாட்டில் சிலப்பதிகார மாநாடு நடத்தியவர் யார்**?

Answer: **மா.பொ.சிவஞானம்**

14. **சிலம்புச் செல்வர் என அழைக்கப்படுபவர் யார்**?

Answer: **மா.பொ. சிவஞானம்**

15. **யார் தலைமையில் ஆணையம் அமைக்கப்பட்டு திருத்தணி வரையுள்ள தமிழ் நிலங்கள் மீட்கப்பட்டன**?

Answer: **படாஸ்கர் ஆணையம்**

16. **சென்னை மாகாணத்தில் இருந்து பிரித்து ஆந்திரம் அமைவதற்காக ஏற்படுத்தப்பட்டிருந்த ஒரு நபர் ஆணையத்தின் தலைமை யார்**?

Answer: **நீதிபதி வாஞ்சு**

17. **மா.பொ. சிவஞானத்தின் தெற்கெல்லை கிளர்ச்சி பற்றிய முதல் பேச்சு எங்கு எப்போது நடந்தது**?

Answer: **அக்டோபர்** 25, 1946 ,**நாகர்கோவில் நகரின் வடிவீஸ்வரம்** , **வடிவை வாலிபர்**

**சங்கத்தின் ஆண்டு விழாவில்**

18. **தெற்கெல்லை கிளர்ச்சியில் திருவிதாங்கூர் ஆட்சி நடத்திய துப்பாக்கி சூடு காரணமாக உயிர் நீத்தவர்கள் யார்**?

Answer: **தேவசகாயம் ,செல்லையா**

19. **மார்ஷல் ஏ. நேசமணி என்ன பணிகளை வகித்துள்ளார்**?

Answer: **வழக்கறிஞர், நாகர்கோவில் நகர்மன்ற தலைவர் ,சட்டமன்ற உறுப்பினர், நாடாளுமன்ற உறுப்பினர்**

20. **குமரிமாவட்ட போராட்டத்தை முன்னெடுத்துச் சென்றவர் யார்**?

Answer: **மார்ஷல் ஏ. நேசமணி**

21. **எப்போது கன்னியாகுமரி மாவட்டம் தமிழ்நாட்டுடன் இணைந்தது** ?

Answer: **நவம்பர்** 1, 1956

22. **மார்ஷல் ஏ. நேசமணி அவர்களின் நினைவைப் போற்றும் வகையில் தமிழக அரசு அவருக்கு எங்கு மணிமண்டபம் அமைத்துள்ளது** ?

Answer: **நாகர்கோவில்**

23. **எந்த நூல்களில் தமிழகத்தின் வடக்கு எல்லை வேங்கடமலையாகவும், தெற்கெல்லை குமரிமுனையாகவும் கூறப்படுகிறது** ?

Answer: **புறநானூறு ,சிலப்பதிகாரம்**

24. **ஆஸ்டிரியா நாட்டு தலைநகரம் எது**?

Answer: **வியன்னா**

25. **முசிறி -அலெக்சாண்டிரியா ஒப்பந்தம் எந்த ஆண்டு ஏற்படுத்திக் கொள்ளப்பட்டது**?

Answer: **கி.பி இரண்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதி**

26. **மாப்பு சிவஞானத்தின் தன் வரலாற்று நூல் எது**?

Answer: **எனது போராட்டம்**

27. **மா.பொ. சிவஞானத்தின் காலம் என்ன** ?

Answer: 1906 - 1995

28. **மா.பொ.சிவஞானம் எந்த ஆண்டு சட்டமன்ற மேலவைத் தலைவராக பதவி வகித்துள்ளார்** ?

Answer: 1972 **முதல்** 1978 **வரை**

29. **மா பொ சிவஞானம் என்ன கழகத்தைத் தொடங்கினார்** ?

Answer: **தமிழரசு கழகம்**

30. **மா.பொ. சிவஞானத்தின் எந்த நூல்** 1966 **ஆம் ஆண்டு சாகித்ய அகடமி விருது பெற்றது**?

Answer: **வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு**

31. **மா பொ சிவஞானத்திற்கு தமிழரசு எங்கு சிலை அமைந்துள்ளது**?

Answer: **திருத்தணியிலும்**, **சென்னை தியாகராய நகரிலும்**

32. **ஏர் புதிதா** ? **எனும் கவிதையை இயற்றியவர்**?

Answer: **கு.ப. ராஜகோபாலன்**

33. **பொன்னேர் பூட்டுதல் எந்த திங்களில் நடத்தப்படும்**?

Answer: **சித்திரைத் திங்கள்**

34. "**ஏர் புதிதா**?" **எனும் கவிதை எந்த நூலில் இடம் பெற்றுள்ளது** ?

Answer: **கு.ப.ரா.படைப்புகள்**

35. **கு ப ராஜகோபாலன் எங்கு எப்போது பிறந்தார்** ?

Answer: **கும்பகோணம்** 1902

36. **கு ப ராஜகோபாலன் எந்த இதழ்களின் ஆசிரியராக பணிபுரிந்துள்ளார்**?

Answer: **தமிழ்நாடு ,பாரதமணி ,பாரததேவி, கிராம ஊழியன்**

37. **கு ப ராஜகோபாலனின் படைப்புகள் என்ன நூலாக தொகுக்கப்பட்டுள்ளன**?

Answer: **அகலிகை, ஆத்ம சிந்தனை**

38. "**இந்தி ரன்முதற் திசபாலர் எண் மரும்ஒரு வடிவாகி வந்தபடி யென நின்று மனுவாணை தனி நடாத்திய**" **இம்மெய்க்கீர்த்தி யாரைப் பற்றியது**?

Answer: **இரண்டாம் ராஜராஜ சோழன்**

39. **இரண்டாம் ராஜராஜ சோழனுக்கு வழங்கப்படும் வேறு பெயர்கள் என்னென்ன** ?

Answer: **கோப்பரகேசரி ,திருபுவனச் சக்கரவர்த்தி**

40. **இரண்டாம் ராஜராஜ சோழனுடைய மெய்க்கீர்த்திகள் எத்தனை** ?

Answer: **இரண்டு**

41. "**சிறுகுறங் கைவினைப் பிறர்வினை யாளரோடு மறுஇன்றி விளங்கும் மருவூர்ப் பாக்கமும்**" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **இந்திரவிழா ஊரெடுத்த காதை , சிலப்பதிகாரம்**

42. "**சிந்தா மணியாம் சிலப்பதிகாரம் படைத்தான் கந்தா மணிமேகலையும் புனைந்தான்** ..." **இவ்வரிகள் இடம்பெற்ற நூல்** ?

Answer: **திருத்தணிகையுலா**

43. **சிலப்பதிகாரத்தில் வரும் தமிழ் நடைக்கு என்ன பெயர்**?

Answer: **உரைப்பாட்டு மடை**

44. **இந்திர விழா ஊர் எடுத்த காதை சிலப்பதிகாரத்தில் எந்த கண்டத்தில் உள்ளது**?

Answer: **புகார்க்காண்டம்**

45. **சிலப்பதிகாரத்திற்கு வழங்கப்படும் வேறு பெயர்கள் என்னென்ன**?

Answer: **முத்தமிழ் காப்பியம் குடிமக்கள் காப்பியம்**

46. **சிலப்பதிகாரத்தில் உள்ள காண்டங்கள் என்னென்ன** ?

Answer: 3 , **புகார் காண்டம்**, **மதுரைக் காண்டம்** ,**வஞ்சிக் காண்டம்**

47. **சிலப்பதிகாரம் எத்தனை காதைகள் உடையது**?

Answer: 30 **காதைகள்**

48. **இரட்டை காப்பியங்கள் என அழைக்கப்படும் நூல்கள்** ?

Answer: **சிலப்பதிகாரம் ,மணிமேகலை**

49. **சிலப்பதிகாரத்தின் ஆசிரியர் யார்**?

Answer: **இளங்கோவடிகள்**

50. **இளங்கோவடிகள் எந்த மரபைச் சார்ந்தவர்** ?

Answer: **சேர மரபு**

51. **மணிமேகலை ஆசிரியர் யார்**?

Answer: **சீத்தலைச் சாத்தனார்**

52. **கோவலன் கண்ணகி கதையை கூறி அடிகள் நீரே அருளுக என கூறியவர் யார்**?

Answer: **சீத்தலைச்சாத்தனார்**

53. "**நாட்டுதும் யாம் ஓர் பாட்டுடைச் செய்யுள்**" **எனக் கூறியவர் யார்**?

Answer: **இளங்கோவடிகள்**

54. **எம் எஸ் சுப்புலட்சுமி எந்த வகுப்பு வரை கல்வி பயின்றுள்ளார்** ?

Answer: **ஐந்தாம் வகுப்பு**

55. **எம் எஸ் சுப்புலட்சுமியின் நடித்த திரைப்படம் எது**?

Answer: **மீரா**

56. 1947 **இல் காந்தியடிகளின் பிறந்த நாளன்று எம்எஸ் சுப்புலட்சுமியிடம் காந்தி பாடும்படி கேட்டுக் கொண்ட பாடல் எது**?

Answer: **ஹரி தும் ஹரோ எனும் மீரா பஜன்**

57. **எம் எஸ் சுப்புலட்சுமி எந்த ஆண்டு தாமரையணி விருது பெற்றார்**?

Answer: 1954

58. **எம் எஸ் சுப்புலட்சுமி எந்த ஆண்டு இங்கிலாந்தில் பாடினார்**?

Answer: 1963

59. **எம்.எஸ்.சுப்புலட்சுமி எந்த ஆண்டு ஐ.நா அவையில் பாடினார்** ?

Answer: 1966

60. **எந்த ஆண்டில் எம்.எஸ் சுப்புலட்சுமிக்கு மகசேசே விருது கிடைத்தது**?

Answer: 1974

61. **மகசேசே விருது பெற்ற முதல் இசை கலைஞர் யார்**?

Answer: **எம் எஸ் சுப்புலட்சுமி**

62. **ராஜம் கிருஷ்ணனின் எந்த நூல் சாகித்ய அகாடமி விருது பெற்றது** ?

Answer: **வேருக்கு நீர்**

63. **சாகித்ய அகாடமி விருது பெற்ற முதல் பெண் எழுத்தாளர் யார்**?

Answer: **ராஜம்கிருஷ்ணன்**

64. **ராஜம் கிருஷ்ணன் எழுதிய நூல்கள் என்னென்ன**?

Answer: **பாஞ்சாலி சபதம் பாடிய பாரதி**, **கரிப்பு மணிகள்**, **குறிஞ்சித்தேன்**, **அலைவாய்க் கரையில்**, **சேற்றில் மனிதர்கள்**, **வேருக்கு நீர்**, **கூட்டுக் குஞ்சுகள்**, **மண்ணகத்து பூந்துளிகள்**

65. **கிருஷ்ணம்மாள் ஜெகநாதன் பெற்ற விருதுகள் என்னென்ன** ?

Answer: **தாமரைத்திரு விருது ,ஸ்வீடன் அரசின் வாழ்வுரிமை விருது ,சுவிட்சலாந்து அரசின் காந்தி அமைதி விருது**

66. **கிருஷ்ணம்மாள் ஜெகநாதன் என்ன இயக்கத்தைத் தொடங்கி வேளாண்மை இல்லாத காலத்திலும் உழவருக்கு வேறு பணிகள் மூலம் வருமானம் வர ஏற்பாடு செய்துள்ளார்**?

See Answer: **உழுபவருக்கு நில உரிமை இயக்கம்** (land for the tiller' freedom - LAFTI)

67. **வாஜ்பாய் அவர்களின் கைகளால் பெண் ஆற்றல் விருது** (**ஸ்திரீ சக்தி பரஸ்கார்**)**வாங்கியவர் யார்**?

Answer: **சின்னப்பிள்ளை**

68. **சின்ன பிள்ளை பெற்ற விருதுகள் என்னென்ன**?

Answer: **தமிழக அரசின் ஔவை விருது ,தூர்தர்ஷனின் பொதிகை விருது , தாமரைத்திரு விருது**

69. "**ஏர் பிடிக்கும் கைகளுக்கு வாழ்த்து கூறுவோம்**" **இவ்வரிகளை எழுதியவர் யார்**?

Answer: **கவி.கா.மு.ஷெரீப்**

70. "**கற்ற பெண்களை இந்த நாடு தன் கண்ணில் ஒற்றிக் கொள்ளுமன் போடு**" **இவரிகளை இயற்றியவர் யார்**?

Answer: **பாரதிதாசன்**

71. **என் கதை எனும் நூலின் ஆசிரியர்**?

Answer: **நாமக்கல் கவிஞர் வெ இராமலிங்கனார்**

72. **நாற்காலிக்காரரர் எனும் நூலின் ஆசிரியர்**?

Answer: **ந முத்துசாமி**

இயல் எட்டு

அறம், தத்துவம், சிந்தனை

# பெருவழி

1. சங்க காலத்திற்குப் பிந்தைய அற இலக்கியங்களின் காலம் எவ்வாறு அழைக்கப்படுகிறது?

Answer: அறநெறிக் காலம்

2. கவிதை வாழ்க்கையின் திறனாய்வு எனக் கூறுபவர் யார் திறனாய்வாளர்?

Answer: ஆர்னால்டு

3. "இம்மை செய்தது மறுமைக்கு ஆம் எனும் அறவிலை வணிகன் ஆய்அலன்" இவ்வரிகள் இடம்பெற்ற நூல்?

Answer: புறநானூறு

4. "இம்மை செய்தது மறுமைக்கு ஆம் எனும் அறவிலை வணிகன் ஆய்அலன்" இவ்வரிகளை இயற்றியவர்?

Answer: முடமோசியார்

5. "நன்றும் தீதும் ஆய்தலும் அன்பும் அறனும் காத்தலும் அமைச்சர் கடமை" எனக் கூறும் நூல் எது?

Answer: மதுரைகாஞ்சி

6. "செம்மை சான்ற காவிதி மாக்கள்" என்று அமைச்சர்களை போற்றுபவர் யார்?

Answer: மாங்குடி மருதனார்

7. "அறம் அறக் கண்ட நெறிமான் அவையம்" எனக் கூறும் நூல் எது ?

Answer: புறநானூறு

8. எங்கு இருந்த அற அவையம் தனிச்சிறப்பு பெற்றது ?

Answer: உறையூர்

9. தம்மை விட வலிமை குறைந்தாரோடு போர் செய்வது கூடாது எனக் கூறுபவர் யார்?

Answer: ஆவூர் மூலங்கிழார்

10. "எறியார் எறிதல் யாவணது எறிந்தார் எதிர் சென்று எறிதலும் செல்லான்" இவ்வரிகள் இடம்பெற்ற நூல்?

Answer: புறநானூறு

11. "செல்வத்தின் பயனே ஈதல்" என குறிப்பிடும் நூல் எது?

Answer: புறநானூறு

12. "செல்வத்தின் பயனே ஈதல் துய்ப்பேம் எனினே தப்புந பலவே "இவ்வரிகள் இயற்றியவர் யார் ?

Answer: மதுரை கணக்காயனார் மகனார் நக்கீரனார்

13. எழுவரின் கொடை பெருமை எந்த நூல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது?

Answer: சிறுபானாற்றுப்படை, பெருஞ்சித்திரனார் பாடலிலும்

14. கொடை பெருமைகளாக பேசப்படுகின்றனவை எவை ?

Answer: அரியன என்று கருதாது ,தயங்காது கொடுத்தலும் ,ஈதலால் வரும் இழப்புக்கு வருந்தாமையும், நாள்தோறும் கொடுத்தலும்

15. வள்ளலின் பொருள் இரவலனின் பொருள், வள்ளலின் வறுமை இரவலனின் வறுமை எனக் குறிப்பிடுபவர் யார்?

Answer: பெரும்பதுமனார்

16. உலகமே வறுமையுற்றாலும் கொடுப்பவன் அதியன் எனக் கூறுபவர் யார்?

Answer: **அவ்வையார்**

17. **இரவலர் வராவிட்டாலும் அவர்களை தேடி வரவழைத்தல் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் இயல்பு எனக் கூறுபவர் யார்**?

Answer: **நச்செள்ளையார்**

18. **பேகன் மறுமை நோக்கி கொடுக்காதவன் என கூறுபவர் யார்**?

Answer: **பரணர்**

19. **தன்னை நாடி வந்த பரிசிலன் பொருள் பெறாமல் திரும்புவது தன் நாட்டை இழந்த துன்பத்தை விட பெருந்துன்பம் என குமணன் வருந்துவதாக எந்த புலவர் குறிப்பிட்டுள்ளார்**?

Answer: **பெருந்தலைச் சாத்தனார்**

20. **எல்லாவற்றையும் கொடுப்பவன் என்று மலையமான் திருமுடிக்காரியை பாராட்டியவர் யார்**?

Answer: **கபிலர்**

21. **இரப்பாரோர்க்கு ஈயாது வாழ்தலைவிட உயிரை விட்டு விடுதல் மேலானது எனக் கூறும் நூல் எது**?

Answer: **கலித்தொகை**

22. **தான் பெற்றதை பிறருக்கு வழங்கும் பெருஞ்சித்திரனாரின் பேருள்ளம் எந்த நூலில் புலப்படுத்தப்பட்டிருக்கிறது** ?

Answer: **புறநானூறு**

23. **உதவி செய்தலை உதவியாண்மை என குறிப்பிடுபவர் யார்**?

Answer: **ஈழத்துப் பூதன் தேவனார்**

24. "**பிறர் நோயும் தம் நோய் போல் போற்றி அறன் அறிதல் சான்றோர்க்கு எல்லாம் கடன்** " **இவ்வரிகள் இடம் பெற்ற நூல்** ?

Answer: **கலித்தொகை**

25. **பிறர் துன்பத்தையும் தன் துன்பமாக கருதி உதவுதல் பற்றி குறிப்பிடுபவர் யார்**?

Answer: **நல்லந்துவனார்**

26. "**உண்மையான செல்வம் என்பது பிறர் துன்பம் தீர்ப்பது தான்**" **என கூறுபவர் யார்**?

Answer: **நல்வேட்டனார்**

27. "**சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர் புன்கண்**…" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல் எது**?

Answer: **நற்றிணை**

28. **உறவினர் கெட வாழ்பவனின் பொலிவு அழியும் என கூறுபவர் யார்** ?

Answer: **பெருங்கடுங்கோ**

29. "**நிறைவடைகிறவனே செல்வன்**" **என கூறுவது எது** ?

Answer: **சீன நாட்டு தாவோயியம்**

30. "**பிழையா நன்மொழி என்று வாய்மையை குறிப்பிடும் நூல் எது**?

Answer: **நற்றிணை**

31. **போதிதர்மர் எந்த மாநகரத்தின் சிற்றரசர்**?

Answer: **காஞ்சி**

32. **போதிதர்மர் எந்த ஆண்டு சீனாவுக்குச் சென்றார்** ?

Answer: **கி.பி. ஆறாம் நூற்றாண்டு தொடக்கம்**

33. **ஞானம் எனும் கவிதை எந்த நூலில் இடம்பெற்றுள்ளது**?

Answer: **கோடை வயல்**

34. **கோடை வயல் எனும் நூலை இயற்றியவர் யார்**?

Answer: **தி.சொ. வேணுகோபாலன்**

35. **தி.சொ. வேணுகோபாலனின் மற்றும் ஒரு கவிதை தொகுப்பு எது**?

Answer: **மீட்சி விண்ணப்பம்**

36. "**இவைசரி யென்றால் இயம்புவதென் தொழில் இவைதவ றாயின் எதிர்ப்பதென் வேலை இவ்வரிகளை இயற்றியவர்**?

Answer: **கவிஞர் கண்ணதாசன்**

37. "**மாற்றம் எனது மானிடத் தத்துவம்**" **என கூறியவர்**?

Answer: **கவிஞர் கண்ணதாசன்**

38. **கண்ணதாசனின் இயற்பெயர் என்ன** ?

Answer: **முத்தையா**

39. **கண்ணதாசன் எங்கு பிறந்தார்** ?

Answer: **சிவகங்கை மாவட்டம் ,சிறுகூடல்பட்டி**

40. **கண்ணதாசனின் பெற்றோர் பெயர் என்ன**?

Answer: **சாத்தப்பன் -விசாலாட்சி**

41. **எந்த ஆண்டு திரைப்பட பாடலாசிரியர் ஆனார் கவிஞர் கண்ணதாசன்**?

Answer: 1949, **கலங்காதிரு மனமே என்ற பாடலை எழுதி**

42. **கவிஞர் கண்ணதாசனின் எந்த நூல் சாகித்ய அகாடமி விருது பெற்றது** ?

Answer: **சேரமான் காதலி**

43. "**நதியின் பிழையன்று நறும்புனலின்மை அன்றே**" **இவ்வரிகளை எழுதியவர்**?

Answer: **கம்பன்**

44. **நாளுக்கு ஒருமுறை மலருவது எது**?

Answer: **சண்பகம்**

45. **ஆண்டுக்கு ஒருமுறை மலருவது எது** ?

Answer: **பிரம்மகமலம்**

46. 12 **ஆண்டுக்கு ஒருமுறை மலருவது எது** ?

Answer: **குறிஞ்சி**

47. **தலைமுறைக்கு ஒரு முறை மட்டுமே மலருவது எது**?

Answer: **மூங்கில்**

48. "**கூர்வேல் குவைஇய மொய்ம்பின் தேர்வண் பாரிதண் பறம்பு நாடே** "

**இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **புறநானூறு**

49. "**கூர்வேல் குவைஇய மொய்ம்பின் தேர்வண் பாரிதண் பறம்பு நாடே** "

**இவ்வரிகளில் இடம் பெறும் ஊர் எது**?

Answer: **சிவகங்கை மாவட்டத்தின் பிரான்மலை அல்லது பரம்புமலை**

50. "**மரம் தேடிய கலைப்பு மின்கம்பியில் இளைப்பாறும் குருவி**" **இவ்வரிகளை இயற்றியவர்**?

Answer: **நாணற்காடன்**

51. "**விற்பனையில் காற்று பொட்டலம் சிக்கனமாய் மூச்சு விடவும்**…"

**இவ்வரிகளை இயற்றியவர்** ?

Answer: **புதுவைத் தமிழ்நெஞ்சன்**

52. "**கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர் தருவே தரு நிழலே நிழல் கனிந்த கனியே**" **இவ்வரிகளை இயற்றியவர் யார்**?

Answer: **வள்ளலார்**

53. **அறமும் அரசியலும் என்ற நூலின் ஆசிரியர் யார்** ?

Answer: **மு.வரதராசனார்**

54. **அபி கவிதைகள் என்னும் நூலின் ஆசிரியர் யார்** ?

Answer: **அபி**

55. **எண்ணங்கள் என்னும் நூலின் ஆசிரியர் யார்** ?

Answer: **எம்.எஸ்.உதயமூர்த்தி**



**இயல் ஒன்பது**

*மனிதம், ஆளுமை*

# அன்பின் மொழி

1. **எழுத்தாளர் ஜெயகாந்தனின் காலம் என்ன** ?

Answer: 24.04.1934-08.04.2015

2. **ஜெயகாந்தன் பெற்ற விருதுகள் என்னென்ன**?

Answer: **குடியரசுத் தலைவர் விருது, சாகித்திய அகடமி விருது, சோவியத்து நாட்டு விருது, ஞானபீட விருது**

3. **ஜெயகாந்தன் எதற்காக குடியரசுத் தலைவர் விருது பெற்றார்?**

Answer: **உன்னைப்போல் ஒருவன் திரைப்படத்திற்காக**

4. **ஜெயகாந்தன் சாகித்ய அக்கடமி விருது எதற்காக பெற்றார்?**

Answer: **சில நேரங்களில் சில மனிதர்கள் புதினத்துக்காக**

5. **ஜெயகாந்தன் சோவியத் நாட்டு விருது எதற்காக பெற்றார்?**

Answer: **இமயத்துக்கு அப்பால் எனும் நூலிற்காக**

6. **ஜெயகாந்தன் எழுதிய சிறுகதை தொகுப்புகள் என்னென்ன?**

Answer: **குருபீடம், யுகசந்தி ,ஒரு பிடி சோறு ,உண்மை சுடும், இனிப்பும் கரிப்பும்,தேவன் வருவாரா ,புதியவார்ப்புகள்**

7. **ஜெயகாந்தன் எழுதிய குறும் புதினங்கள் என்னென்ன?**

Answer: **பிரளயம் , கைவிலங்கு , ரிஷிமூலம் , பிரம்ம உபதேசம் ,யாருக்காக அழுதான்? ,கருணையினால் அல்ல, சினிமாவுக்கு போன சித்தாளு**

8. **ஜெயகாந்தன் எழுதிய புதினங்கள் என்னென்ன?**

Answer: **பாரீசுக்கு போ ,சுந்தரகாண்டம் ,உன்னை போல் ஒருவன், கங்கை எங்கே போகிறாள், ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள், இன்னும் ஒரு பெண்ணின் கதை, ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்**

9. **ஜெயகாந்தனின் மொழிபெயர்ப்புகள் என்னென்ன ?**

Answer: **வாழ்விக்க வந்த காந்தி (பிரெஞ்சு மொழியில் வந்த காந்தி வாழ்க்கை வரலாற்றின் தமிழாக்கம்), ஒரு கதாசிரியரின் கதை ( முன்ஷி பிரேம்சந்தின் வாழ்க்கை வரலாறு)**

10. **ஜெயகாந்தனின் எந்த படைப்புகள் திரைப்படம் ஆகியுள்ளன**?

Answer: **சில நேரங்களில் சில மனிதர்கள், ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள், ஊருக்கு நூறு பேர், உன்னைப் போல் ஒருவன், யாருக்காக அழுதான்**

11. **சிறுகதை மன்னன் என அழைக்கப்படுபவர் யார்**?

Answer: **ஜெயகாந்தன்**

12. **சித்தாளு எனும் கவிதையை எழுதியவர் யார்**?

Answer: **நாகூர் ரூமி**

13. **நாகூர் ரூமியின் இயற்பெயர் என்ன**?

Answer: **முகமது ரஃபி**

14. **நாகூர் ரூமி எங்கு பிறந்தார்** ?

Answer: **தஞ்சை மாவட்டம்**

15. **நாகூர் ரூமி எந்த இதழில் எழுதத் தொடங்கினார்** ?

Answer: **கணையாழி**

16. **இதுவரை நாகூர் ரூமியின் வெளிவந்துள்ள கவிதைத் தொகுதிகள் என்னென்ன**?

Answer: **நதியின் கால்கள் ,ஏழாவது சுவை ,சொல்லாத சொல்**

17. **நாகூர் ரூமி படைத்த நாவலின் பெயர் என்ன**?

Answer: **கப்பலுக்கு போன மச்சான்**

18. **கிறிஸ்துவின் வருகையை அறிவித்த முன்னோடி யார்**?

Answer: **திருமுழுக்கு யோவான் அல்லது அருளப்பன்**

19. **வீரமாமுனிவர் தன் காப்பியத்தில் திருமுழுக்கு யோவான் அவர்களுக்கு என்ன பெயரிட்டுள்ளார்** ?

Answer: **கருணையன்**

20. **கருணையனின் தாயார் பெயர் என்ன** ?

Answer: **எலிசபெத் அம்மையார்**

21. "**உய்முறை அறியேன்; ஓர்ந்த உணர்வினொத்து உறுப்பும் இல்லா மெய்முறை அறியேன்" இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **தேம்பாவணி**

22. **வீரமாமுனிவர் திருச்சியை ஆண்ட எந்த மன்னரை சந்தித்து உரையாடுவதற்காக இரண்டே மாதங்களில் உருது மொழியை கற்றுக்கொண்டார்**?

Answer: **சந்தாசாகிப்**

23. **சந்தாசாகிப் வீரமாமுனிவருக்கு என்ன பட்டம் அளித்தார்**?

Answer:

24. **இஸ்மத் சன்னியாசி என்ற பாரசீகச் சொல்லுக்கு என்ன பொருள்**?

Answer: **தூய துறவி**

25. **தேம்பாவணி என்பதன் பொருள் என்ன**?

Answer: **வாடாத மாலை என்றும் , தேன் போன்ற இனிய பாடல்களின் தொகுப்பு என்றும் பொருள் கொள்ளப்படுகிறது**.

26. **தேம்பாவணியின் பாட்டுடைத் தலைவன் யார்** ?

Answer:**கிறிஸ்துவின் வளர்ப்புத் தந்தையாகிய சூசையப்பர் என்னும் யோசேப்** (**வளன்**)

27. **தேம்பாவணி எத்தனை காண்டங்களையும் படலங்களையும் கொண்டது**?

Answer: **மூன்று காண்டங்கள்** ,36 **படலங்கள்**

28. **தேம்பாவணி எத்தனை பாடல்களைக் கொண்டுள்ளது**?

Answer: 3615 **பாடல்கள்**

29. **தேம்பாவணி எந்த காலகட்டத்தில் படைக்கப்பட்டது** ?

Answer: **பதினேழாம் நூற்றாண்டு**

30. **வீரமாமுனிவரின் இயற்பெயர் என்ன**?

Answer: **கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி**

31. **தமிழின் முதல் அகராதி எது**?

Answer: **சதுரகராதி**

32. **வீரமாமுனிவர் இயற்றிய நூல்கள் என்னென்ன**?

Answer: **சதுரகராதி**, **தொன்னூல் விளக்கம்**, **சிற்றிலக்கியங்கள்** ,**உரைநடை நூல்கள்**, **பரமார்த்த குரு கதைகள்**, **மொழிபெயர்ப்பு நூல்கள்**

33. **ஒருவன் இருக்கிறான் எனும் சிறுகதையை எழுதியவர்** ?

Answer: **கு.அழகிரிசாமி**

34. "**ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து அரசு பட அமர் உழக்கி**" **இவ்வரிகள் இடம் பெற்ற நூல்**?

Answer: **மதுரைக்காஞ்சி**

35. "**ஆலங்கானத்து அஞ்சுவர இறுத்து அரசு பட அமர் உழக்கி**" **இவ்வரிகளில் இடம்பெற்றுள்ள ஊர் எது**?

Answer: **திருவாரூர் மாவட்டத்தின் ஆலங்கானம்**

36. **ஒருவன் இருக்கிறான் என்னும் கதை எந்த தொகுப்பில் இடம்பெற்றுள்ளது**?

Answer: **கு.அழகிரிசாமியின் சிறுகதைகள்**

37. **கரிசல் எழுத்தாளர்கள் வரிசையில் மூத்தவர் என அழைக்கப்படுபவர்**?

Answer: **கு.அழகிரிசாமி**

38. **சேரர்களின் பட்டப் பெயர்கள் என்னென்ன**?

Answer: **கொல்லி வெற்பன் ,மலையமான்**

39. **சேரர்களில் எந்த மலையை வென்றவர்கள் கொல்லி வெற்பன் என பட்டப்பெயர்கள் சூட்டிக்கொண்டனர்**?

Answer: **கொல்லிமலை**

40. **சேரர்களில் பிற மலையை வென்றவர்கள் என்ன பட்டம் சூட்டிக் கொண்டனர்**?

Answer: **மலையமான்**

41. **யானை சவாரி எனும் நூலின் ஆசிரியர் யார்** ?

Answer: **பாவண்ணன்**

42. **கல்மரம் என்ற நூலின் ஆசிரியர் யார்**?

Answer: **திலகவதி**

43. **அற்றைத்திங்கள் அவ்வெண்ணிலவில் நூலின் ஆசிரியர் யார்**?

Answer: **முருகேசபாண்டியன்**